# வாணிதாசன் கவிதைகள்

## தொகுதி. 2



பதிப்பாசிரியர்

அரங்க. நலங்கிள்ளி

# வாணிதாசன் கவிதைகள்

தொகுதி—2

பதிப்பாசிரியர்
அரங்க. நலங்கிள்ளி

வாணிதாசன் பதிப்பகம்
புரட்சி அகம்
சேலியமேடு அஞ்சல்
பாகூர் (வழி)
புதுச்சேரி மாநிலம்—607 402

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | — | Vānidasan Kavithaigal Vol II |
| Editor | — | Aranga-Nalangilli |
| Copy right | — | Thirumathi Adilakshmi Vanidasan |
| Edition | — | First, July, 1981 |
| Paper Used | — | 10.9 kg. Shesasayee White Printing |
| Size | — | 18×12.5 cm. |
| Types Used | — | 10, 12, 18 Points |
| Pages | — | XIV+108=124 |
| Copies | — | 1200 Copies |
| Printers | — | Novel Art Printers<br>137, Jani John Khan Road<br>Madras—600 014<br>Phone—82731 |
| Binding | — | Paper Back |
| Price | — | Rs. 6.00 |
| Publisher | — | Vanidasan Pathippakam<br>Seliamedu—507 402. |
| Subject | — | Verses |

பேராசிரியர் டாக்டர் மா. நன்னன்,
எம். ஏ, பிஎச். டி.
தமிழ் வளர்ச்சி இயக்குநர்.

'குறளகம்'
சென்னை-600001.
நாள்: 3-7-'81.

# அணிந்துரை

தமிழறிஞர்களுக்குத் தங்கள் பெயரை எடுக்கும் (நீக்கும்) பிள்ளைகள் பிறந்திருப்பதை நாம் தாராளமாகக் காண்கிறோம். ஆனால் பெயரைக் காக்கும் — உயர்த்தும் — நிலைக்கச் செய்யும் பிள்ளைகள் பிறந்திருக்கக் காண்பது அரிதாகும். அத்தகைய அரிய காட்சி ஒன்றை வாணி- நலங்கிள்ளியைப் பார்த்தபோது நான் கண்டு மகிழ்கிறேன். புதுவைக்கவிஞர் வாணிதாசனின்மகனாய்ப்பிறந்து அறிவாலும் தமிழ்ப் பண்பாலும் வளர்கின்ற வாணி - நலங்கிள்ளி தம் தந்தையார் எழுதி வெளியிடாமல் விட்டுப்போன கவிதைகள் சிலவற்றைத் தொகுத்து வாணிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதி என்னும் பெயரில் வெளியிடுவதைக் கண்டு உவந்து அவரின் விருப்பத்திற்கிணங்க அணிந்துரை ஒன்றும் விரும்பி அளிக்கின்றேன்.

எனதாசான் எனப்புதுவைச் சிவம்சொல்லல் உண்மை!
எனதாசான் என உலகம் என்றென்றும் சொல்லும்!
(பக்: 65)

என்னும் அடிகளில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் மாணவர் தாம் என்னும் உரிமை கொண்டாடும் தகுதி

வாய்த்த வாணிதாசன் தம் ஆசான் மறைவிற்கு இரங்கி நிலைகலங்கிப் பாடியுள்ள பாடல்கள் நம் நெஞ்சத்தையும் கலக்குகின்றன. இவரது நிலை பொதுவாகத் தமிழ்ப் புலவர்களுக்கே உரிய சிறப்பு நிலையாகிய கொடிய வறுமை நிலையாகவே அமைந்திருந்ததென்பதை உணர முடிகிறது.

பாட்டினிலே இனிப்பன்றி நான் பிறந்த இந்நாள்
பகிர்ந்தளிக்க வேறொன்றும் என்னிடத்தில் இல்லை!
(பக். 2)

என்று கூறும் இவரது கூற்றிலிருந்து தாம் பிறந்தநாள் பரிசாகத் தமக்கினியவர்களுக்கு இப்பாடலைத் தவிர வேறு எதையும் கொடுக்க முடியாத நிலையில் இருந்திருக்கிறார் என்பதை அறிந்து நான் பெரிதும் வருந்துகிறேன். பொருள்தான் இல்லையென்றாலும் உற்றார், சுற்றம் என்று கூறவும் ஆளில்லை என்று அவர் கூறுவதை அறிகிற போது அவரின் வாழ்க்கையின் நிலையை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

—புகழ்
சூழத்தான் நினைக்கிறேன்
சுற்றமெனக் கில்லை — ஆன்ற
சுற்றமெனக் கில்லை (பக்: 3)

எனும் வாணிதாசனின் பாடற்பகுதி மேற்கூறிய அவர் தம் நிலையை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. இந்நிலையில் இருக்கும் அவர்

கெடல்படிந்த இவ்வுலகை மாற்றாதோன் மூடன்!
சிரிநான் பாம்பிற்கு! வாயடங்க மாட்டேன்!
மடச்செயலைக் கண்டென்றும் வாயடங்க மாட்டேன்!
(பக். 5)

என்றெல்லாம் கூறிக் கவிஞராம் தம் கடமையைச் செய்வதில் தாம் எத்தகையர் என்பதை வெளிப்படுத்திக் கொள்கிறார்.

கொடுமைகளை அழிப்பதற்குப்
"பிற்போக்கு நிலைமாற பரவட்டும் தீயே" (பக். 9

என்றும் நன்மைகளை ஆக்குவதற்குப்

"புதுமைத்தீ பரவட்டும்
பரவட்டும் இன்றே" (பக். 10)

என்றும் கூறித் தம் வேணவாவை அவர் வெளிப்படுத்தியிருப்பது இன்றைய தமிழருக்கும் உரமூட்டுவதாகும்.

இத்தொகுதியில் வந்துள்ள பாடல்கள் வாணிதாசனின் பாத்திறத்திற்குப் பொருத்தமான எடுத்துக் காட்டுகளாக இலங்குகின்றன. அத்தகைய பாடல்களுள் இரண்டினை இங்குச் சுட்டி மகிழ்கிறேன்.

மாதுளை ... ... ...
... ... ... குனிந்து (பக். 36)

சாய்வாழ் ... ... ...
... ... ... சொத்தே (பக்.9 5-96)

இவர்தம் பாடலிலுள்ள பொருட் சிறப்பிற்குப் பல சான்றுகளை இந்நூலிலிருந்தே எடுத்துக் காட்டலாம். அவற்றுள்,

பக்கம் 80-81 இல் வெண்கழுதுப் பேடையைப் புனைந்து காட்டும் பாடலில் அதன் தாய் அன்பை எடுத்துக்காட்டும் பாங்கு மறக்க முடியாததாகும். பக்கம் 51-52 இல் 'இன்னும் அவள்மேல் நினைப்பா?' என்னும் தலைப்பில் இடம் பெற்றுள்ள பாடல்கள்,

மங்கை ஒருத்தி தரும் சுகமும் — எங்கள்
மாத்தமிழ்க் கீடில்லை என்றுரைப்போம்

என்னும் புரட்சிக் கவிஞர் வகுத்த இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைகின்றன. பேராசிரியர் சுந்தரனாரின் மனோன்மணீயத்தில் சேரவேந்தன் புருடோத்தமன் தான் கனவில்

கண்டு காதலித்த காரிகையைப் பற்றிய நினைவைப் போரில் ஈடுபட்டேனும் மறக்கலாம் என்று எண்ணுவதாகக் கூறப்பட்டுள்ளது. அது அவ்வேந்தன் வீரத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது. அதேபோல் வாணிதாசனின் இப் பாடல்கள் காதல் உணர்வுகளைத் தமிழ்ப் பாடலின் மூலம் மறக்கலாம் என்று கூறுகின்றன. இது வாணிதாசன் தமிழின் மேல் கொண்டுள்ள ஆழ அகலத்தையும் உயரப் பருமனையும் குன்றின்மேல் இட்ட விளக்காகக் காட்டுகின்றன.

பக்கம் 29 இல் "எடுவாளைத் தயங்காதே வறுமைக்கு மாற்றே" என்று கூறும் பாடல்கள் இவர் புரட்சிக் கவிஞரின் மாணவர் என்பதை நன்கு வெளிப்படுத்துகின்றன. பக்கம் 65இல் சற்றொதுங்கிப் போவீர்' என்னும் தலைப்பிலுள்ள பாடல்கள் நம் கருத்தையும் கண்களையும் கலங்கச் செய்கின்றன. தமிழர் தளபதிகளுள் ஒருவராகிய பன்னீர் செல்வம் ஓமான் கடலுக்கு இரையான காலத்தில் புரட்சிக் கவிஞர் பாடிய பாடல்களை அவை நினைவூட்டுகின்றன.

இனி இவரின் உவமை அழகுக்குச் சில இடங்களைத் தொட்டுக்காட்ட விரும்புகிறேன். பக்கம் 26இல் இவர், காதற்ற ஊசியைக் கேட்டுக் கேட்டுச் சலித்துப்போன நம் செவிகளுக்குக் காதறுந்த செறுப்பை உவமையாக்கிச் சுவையூட்டக் காணலாம்.

பக்கம் 39இல்

எழுத்துப் புணர்ச்சியினைப் போலே — நாம்
இரண்டற ஒன்றிவிட்டதாலே என்பதும்,

பக்கம் 95இல்

பட்டாடை உரல்சுற்றிப் பார்த்திருந்தால் என்னாம்? என்பதும் இவர்தம் அரிய உவமைத்திறம் நம் உவகைத்திறமாகும்.

இறுதியாக இத்தொகுப்பில் வந்துள்ள பாடல்கள் பற்றி வேறு வகையான கருத்துகளையும் நான் வெளியிட வேண்டி நேர்கிறது. இதிலுள்ள கவிதைகள் வாணிதாசன் அவர்களால் அவ்வப்போது இயற்றப்பட்டும் அவராலே வெளியிடப்படாமல் இருந்தனவாகும். ஆகவே அவை அனைத்தும் அவரால் செப்பம் செய்யப்பட்ட பாடல்கள் என்றோ அவரால் வெளியிட வேண்டுமென்றுவிரும்பப் பட்ட பாடல் இது என்றோ கொள்ள முடியாது. இருப்பினும் தரம் மிக்கனவாக உள்ள அப்பாடல் தொகுதியில் ஒரு சில பகுதிகள் அவர்தம் கண்ணும், கையும், கருத்துடன் சரியாகத் தொடர்பு கொள்ளாத காரணத்தால் போலும் நமக்கு ஐயத்தையும் மருட்கையையும் விளைக்கின்றன. பக்கம் 82இல் இடம் பெற்றுள்ள கார்த்திகைத் திங்கள் கடுங்கோடை ஆனாலும் என்னும் அடிக்குக் கார்த்திகைத் திங்களானாலும், கடும் கோடையானாலும் என்று பொருள் கொண்டால்தான் தெளிவாக இருக்கும். பக்கம் 14இல் தீபாவளியைப் பற்றியும், சத்தியபாமை பற்றியும் கூறப்படுவன நல்ல பகுத்தறிவாளரான பாவலர் வாணிதாசன் இவ்வாறு கூறியிருப்பாரா என்று எம்மை மருள வைக்கின்றன. அவ்வாறே பக்கம் 22இல் தும்பிக்கையானை நாம் தொழுதெழுந்தால் என்னும் அடிகளை அவர் கை எழுதியிருக்குமா என்று என்னை ஐயுறச் செய்கிறது.

வாணிநலங்கிள்ளி இக்கவிதைத் தொகுப்பை வெளியிடுவதன் மூலம் அப்பாவுக்குத் தப்பாத பிள்ளையாகத் தமிழ் உலகிற்கு அறிமுகம் ஆவதைக் காண மகிழ்ந்து அந்த நல்ல இளைஞரைப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

அன்புடன்
மா. நன்னன்

# கவிஞரைப்பற்றி

"வாணிதாசனைத் தமிழ்நாட்டின் 'வோர்ட்ஸ் வொர்த்' (Words worth) என்று இயம்பலாம். இயற்கையைப் பாடுவதில் இவரை மிஞ்சிய தற்காலக் கவிஞர்கள் யாரும் இல்லை."

இருபது நூற்றாண்டுகளில் தமிழ் எனும் நூலில்
டாக்டர் மா. இராமலிங்கம் எம் ஏ,

"திரு. வாணிதாசர் ஒருபெரும் உலகக் கவிஞர் ஆதல் வேண்டும் என்பது எனது வேட்கை."
திரு.வி.க.

'தோழர் வாணிதாசனாரது கவிதைகளைப் படிக்கும் போது சில சமயங்களில் பாரதிதாசனுக்கும் முன்னாலே போகிறார் என்ற எண்ணந்தட்டும். இவரது பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தால் 'நோபல் பரிசு' பெறக் கூடும்.'
தென்றலில் கண்ணதாசன்

வாணிதாசனார், பாரதியார், பாரதிதாசன் ஆகிய இந்த இருவரினும் விஞ்சிய வகையில் பாடிவருகின்றார்... இவருடைய பாடல்களை உலகப் பெருங்கவிஞருள் ஒருவரான இரவீந்திரநாததாகூரின் பாடல்களுக்குச் சமமாகக் கூறலாம். தமிழ்நாட்டிற்குப் பாரதிதாசரும் வாணிதாசரும் இருகண்மணிகள்."

மடமையில் துயிலும் மக்கள் விழிகளைத் திறந்து பார்த்துப் புத்தம் புதுவாழ்வு பெற்று வாழ நம் தமிழ் நாட்டுத் தாகூராகிய வாணிதாசனார் பல்லாண்டு பல்லாண்டு வாழ்வாராக.

எழிலோவியத்தில் பேராசிரியர் மயிலை சிவமுத்து

"எல்லாரும் நல்லார்என் (று) எண்ணுவார் இன்றமிழ்
வல்ல கவிவாணி தாசனார்—அல்லும்
பகலும் தமிழர்தம் பண்புபாடு பற்றிப்
புகலும்பாட்(டு) ஒவ்வொன்றும் பொன்"

சிரித்த நுணாவில் பாவேந்தர் பாரதிதாசனார்

"தமிழகத்தின் மறுமலர்ச்சிக் கவிஞர்களுள் முதிர்ந்த அறிவும், கனிந்த அனுபவமும் பெற்று விளங்குபவர் கவிஞர் திரு. வாணிதாசன்"

எழில்விருத்தத்தில் டாக்டர் க. த. திருநாவுக்கரசு,
எம். ஏ. எம். லிட் பிஎச்.டி



வாணிதாசன்

தோற்றம் : 22-7-1915 மறைவு : 7-[illegible]-1974

## வாணிதாசனாரின் வாழ்க்கைக் குறிப்பு

| | |
|---|---|
| பிறப்பு | — 22-7-1915. |
| ஊர் | — புதுவையை அடுத்த வில்லியனூர். |
| பெற்றோர் | — அரங்க. திருக்காமு, துளசியம்மாள். |
| இயற்பெயர் | — எத்திராசலு என்ற அரங்கசாமி |
| புனைபெயர் | — ரமி, வாணிதாசன் |
| சிறப்புப்பெயர் | — கவிஞரேறு, பாவலர்மன்னன், பாவலர்மணி, புதுமைக்கவிஞர் |
| திருமணம் | — 1935, வயது 20 |
| மனைவி | — ஆதிலட்சுமி |
| மக்கள் | — மாதரி, ஐயை, நக்கீரன், எழிலி, முல்லை, இளவெயினி, நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, பெருங்கிள்ளி. |
| இல்லம் | — புரட்சியகம், சேலியமேடு |
| கல்வி | — பிரெஞ்சிந்தியத் தமிழ் வித்வான் பயிற்சி, தமிழ் பிரவேச பட்டம், வித்வான் பட்டம் |
| பயின்ற நிலையங்கள் | — பிரெஞ்சுமொழிப்பள்ளி, கல்வே கல்லூரி. |
| தமிழ் கற்ற ஆசிரியர்கள் | — எல்லப்ப வாத்தியார், முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை, பாரதிதாசன், முடியரசன். |

| | |
|---|---|
| அறிந்த மொழிகள் | — தமிழ், தெலுங்கு, பிரெஞ்சு, ஆங்கிலம். |
| பணி | — 22 வயதிலிருந்து 56வயதுவரை (1937-1971) தமிழாசிரியர் பணி. 34 ஆண்டுகள். தென்னாற்காடு மாவட்டத் தமிழ்க் கவிஞர் மன்றத்தின் நிரந்தரத்தலைவர் பதவி. |
| கவிதை வெளிவந்த இதழ்கள் | — ஆனந்த விகடன், கவிதை' காதல், குயில், செண்பகம் தமிழன், திராவிடநாடு, திரு விளக்கு, நெய்தல், பிரசண்ட விகடன், பொன்னி, மன்றம், முத்தாரம், முரசொலி |
| முதற்பாடல் | — பாரதிநாள் இன்றடா பாட்டிசைத்து ஆடடா! |
| பட்டம் | — 1954-இல் பிரெஞ்சு குடியரசுத் தலைவரால் "Cherlier D'ordre be L'etoilo D'an Jovan" என்ற பட்டம்வழங்கப்பட்டது |
| பரிசு | — 1938 இல் முதற் கவிதைக்கு தமிழர் இயக்கத் தலைவர் சி.பா. ஆதித்தனாரிடமிருந்து ரூ10 பரிசு. 1950இல் கோவையில் நடந்த முத்தமிழ் மாநாட்டுக் கவிய ரங்கில் 2ஆவது வெள்ளிக்கிண் ணப் பரிசு. 1979இல் தமிழக அரசின் பாவேந்தர் விருது ரூ. 10,000. |

| | |
|---|---|
| | 1972 இல் தென்னாற்காடு மாவட்டத் தமிழ்க் கவிஞர் மன்றத்தாரால் பாராட்டு விழா, பொன் மோதிரம்பரிசு<br>1973இல் புதுவைத் தமிழ்ச் சங்கத்தால் வெள்ளிக்கேடயம் பரிசு.<br>1975இல் (கவிஞர் இறந்தபிறகு) பாட்டரங்கப் பாடலுக்கு முதற்பரிசு ரூ 2000 |
| கவிஞரின் கவிதைகள் மொழி பெயர்க்கப்பட்ட மொழிகள் | — ரஷ்யமொழி, ஆங்கில மொழி இந்திய மொழிகள் 14லும் சில பாடல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. |
| மறைவு | — 7-8-74. |

# பதிப்புரை

எனது தந்தையும் மறைந்த கவிஞருமான கவிஞரேறு வாணிதாசன் அவர்களைத் தமிழும் தமிழுலகமும் நன்கறியும் அவர் மறைந்த பிறகு வருகின்ற முதல் நூல் 'வாணிதாசன் கவிதைகள் தொகுதி-2' எனும் இந்நூலாகும்.

இதற்குமுன் கவிஞரது படைப்புக்களாக வெளிவந்துள்ள நூல்கள் தமிழச்சி, கொடிமுல்லை, எழிலோவியம், வாணிதாசன் கவிதைகள் தொகுதி-1, பாட்டரங்கப் பாடல்கள் முதலாய பதினைந்து நூல்களாகும். இந்நூல்களுக்கு ஆதரவும் ஊக்கமும் கொடுத்து வரவேற்ற தமிழுலகிற்கும் தமிழன்பர்கட்கும் எனது மனமார்ந்த நன்றி. இதே போன்று இப்போது வெளிவருகின்ற இக்கவிதை நூலுக்கும் ஊக்கமும் ஆதரவும் கொடுத்து வரவேற்பார்கள் என நம்புகின்றேன், கிடைத்தவரை கவிதைகள் எழுதப்பட்ட தேதியினை அவ்வக் கவிதைகளின் கீழ் கொடுத்துள்ளேன். வெண்கழுகுப் பேடை எனும் கவிதையின் கருவையே அட்டைப் படத்தின் ஓவியமாக்கியுள்ளேன்.

இந்நூலுக்கு அணிந்துரை தந்துதவிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குனர் டாக்டர் நன்னன் அவர்கட்கும், இந்நூலைப்பதிப்பிக்க எனக்கு ஊக்கமும் துணிவும் ஊட்டிய எனது ஆய்விற்கு வழிகாட்டியான டாக்டர் பொற்கோ அவர்கட்கும், மற்றும் படிகளைப் பரிசோதிப்பதற்குதவிய புலவர் திரு. ந. அறிவழகன், திரு சுதர்சன் எம். ஏ., திரு நாராயணசாமி பி. ஏ., ஆகியவர்கட்கும் இந்நூலை அச்சிட்டுத்தந்த நாவல் அச்சகத்தார்க்கும் அட்டைப் படத்திற்கு ஓவியம் வரைந்துதந்த ஓவியர் திரு. தென்னன் பி.எஸ். அவர்கட்கும் எனது நன்றியைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

அணிந்துரை வழங்கிய டாக்டர் நன்னன் அவர்களின் ஐயத்தினைக் களையும் வகையில், பக்கம் 82இல் உள்ள 'கார்த்திகைத்திங்கள் கடுங்கோடையானாலும்,' என்பதற்கு கார்த்திகைத் திங்கள் வழக்கமாக மழைக்காலம் ஆனால் அக்காலம் மாறி கடுங்கோடையாக மாறினாலும், என நேர் பொருள் கொள்ளலாம். அடுத்து பக்கம் 14இல் உள்ள 'சத்தியபாமை நம் நாட்டுப் பெண்ணுமே' என்பதைக் கவிஞர் தேசிய நோக்கிலே சத்தியபாமை நம் நாட்டுப்பெண் எனக் கூறியிருக்கின்றார் எனக்கொள்ள வேண்டும். அடுத்து பக்கம் 22இல் உள்ள 'தும்பிக்கை யானை நாம்தொழு தெழுந்தால்' என்பதற்கு விளக்கமாக, தமிழ் நூல்களின் தொல் வளனும் அதன் பெருஞ்சிறப்பும் இவற்றைக் கற்றதனால் வந்த புலமை யூற்றும் இவற்றால் பெறப்படுகின்ற தன்னம்பிக்கையையும் இழக்கச் செய்தது தும்பிக்கையானை தொழுதெழும் மூடச்செயலாம் எனும் பொருளை உணர்த்தவே அவ்வரியினை அமைத்துள்ளார் கவிஞர்.

எனவே கவிஞரின் பகுத்தறிவுக் கொள்கையில் ஐயமோ மருட்சியோ கொள்ளத் தேவையில்லை. காரணம் இறுதிக் காலம்வரை அக்கொள்கையில் கோடாதிருந்து மறைந்தார் கவிஞர்.

பிழை நீக்கிப் பதிப்பிக்க வேண்டும் என எவ்வளவோ முயன்றும் தவிர்க்க இயலா சில அச்சுப் பிழைகள் இடம் பெற்று விட்டமையை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கவிதைத் தொகுதியைத் தமிழன்பர்கள் ஏற்று மேலும் வெளிவரவிருக்கின்ற கவிதை, கட்டுரை, நாடகம், மொழிபெயர்ப்பு நாடகம் ஆகியவற்றை வெளியிட ஊக்கம் அளிப்பார்கள் என நம்புகிறேன். வணக்கம், நன்றி.

இவண்

அரங்க. நலங்கிள்ளி

# உள்ளுறை

## I சமுதாயம்



## II காதல் நினைவுகள்



காதல் நினைவுகள் எனும் இப்பெருந்தலைப்பு நூலின் உள்ளே விடப் பட்டுள்ளது. எனவே கன்னலடி கைப்பதில்லை முதலாய பாடல்களை காதல் நினைவுகள் எனும் தலைப்பின் கீழ் படித்துணர்க.

III கையாறு நிலை



IV எண்ணம்

# சமுதாயம்

## வழி வகுத்தால் போதும்

நான்பிறந்த இந்நாளில் நல்லன்பர் கூடி
நாட்டிற்கு நீர்கூறும் செய்தியுண்டோ என்றார்!
வான்பிறந்த வெய்யோனால் ஊன்பிறந்த துண்டாம்!
வளர்ந்துவரு உயிரினங்கள் கதிரியக்க ஆக்கம்!
தேன்பிறந்த செய்தியெலாம் பூக்கூட்டம் சென்று
செவியோடு வண்டிற்கே சொன்னதில்லை என்றும்!
கான்பிறந்து திரிகின்ற புள்ளினம்போல் இன்றிக்
கைகால்கள் முளைத்துள்ளேன்! கண்டபயன் என்னும்? 1

ஊருக்கே உழைப்பதுவும், ஊர்வாழும் மக்கள்
உயர்வுக்கே உழைப்பதுவும் நற்கவிஞர் வாழ்க்கை!
தேருக்கே அச்சாணி! திசைதிருப்ப முட்டுத்
தெருவெல்லாம் கொடுப்பதற்குத் திரண்டதோள் வேண்டும்!
காருக்கே யார்சொன்னார் கடல்நீரை மொண்டு
கழனியெலாம் வளமாக்க? நாம்வாழும் நாட்டில்
நேருக்கு நேர்நடக்கும் அறிவற்ற செய்கை
நெறிப்படுத்த என்பாடல் வழிவகுத்தால் போதும்! 2

அந்தியிலே கோயிலெலாம் மணியடிக்கக் கேட்பேன்;
ஆனாலும் எனதுள்ளம் அமைதிகொள்வ தில்லை!
சந்தியிலே கூடுகின்ற கூட்டம்போல் இன்றித்
தமிழ்மக்கள் தாய்நாட்டின் நலம்பேண வேண்டும்!

பந்தியிலே தலைவாழை இலையிட்டே உண்போர்
பசிமீறக் கையேந்திக் கெஞ்சுகின்ற ஏழை
புந்தியிலே நிழலாடக் காண்கின்றேன்; இந்தப்
போக்கெல்லாம் என்பாடல் மாற்றிவிட்டால் போதும்!

பாலுக்கே அழுங்குழவி பசிக்கேங்கு வோர்கள்
பாயின்றி இடமின்றி நிழலுறங்கும் கூட்டம்
நூலுக்கே வழியின்றிக் கைத்தறியால் வாழ்வோர்
நுணலைப்போல் கூச்சலிட்டால் பசிநீங்கிப் போமோ?
வேலுக்கே வேலெதிர்ப்பை விளைவிக்க வேண்டும்!
விரைவினிலே மக்கட்கு நல்லுழைப்பைத் தூண்டத்
தோளுக்கே உணர்வூட்டப் பகுத்தறிவை ஊட்டத்
தூயதமிழ் என்பாடல் வழிவகுத்தால் போதும்! 4

வீட்டினிலே வாழ்கின்ற தாய்மாரே! வாழ
வினைசெய்யும் பெற்றோரே! குழந்தைகளே! என்றன்
பாட்டினிலே இனிப்பன்றி நான்பிறந்த இந்நாள்
பகிர்ந்தளிக்க வேறொன்றும் என்னிடத்தில் இல்லை!
கூட்டினிலே அடைபட்ட சிறுத்தையைபோல் இன்றிக்
கொல்புலியாய் மாறிடுவீர்! கொடுமைக்கஞ் சாதீர்!
கேட்டினிலே வாழ்வதுவோ! மிகுவெட்கம்! வெட்கம்!
கிளர்ந்தெழுவீர்! கிளர்ந்தெழுவீர்! இதுவேஎன் செய்தி!

ஆளுகின்ற நாற்காலி தமிழ்மக்கள் சொத்தாம்!
ஆள்வோர்க்கே என்றென்றும் அதுவுரிமை ஆமோ?
மூளுகின்ற எதிர்ப்பிற்கோ கூச்சலுக்கோ அஞ்சி
முற்போக்குத் திட்டத்தைத் தள்ளிப்போ டாதீர்!
தோளுக்கு மறவலிமை யூட்டுகின்ற அன்னைத்
தொன்மொழியாம் தமிழ்காப்பீர்! நான்பிறந்த இந்த
நாளினிலே நான்வழங்கும் நற்செய்தி இஃதே!
நலம்பெற்று வளம்பெற்றுத் தமிழ்மக்கள் வாழ்க! 6

2-7-73 அன்று வழங்கிய பிறந்த நாள் செய்தி.

## தீமையோ?

வாழத்தான் நினைக்கின்றேன்
வாழவகை இல்லை—புகழ்
சூழத்தான் நினைக்கின்றேன்
சுற்றமெனக் கில்லை—ஆன்ற
சுற்றமெனக் கில்லை 1

தாழை பூத்த கடற்கரையில்
தனிமை தந்தது இன்பம்—என்றும்
தனிமை தந்தது இன்பம்
ஏழை வாழ வழியுமில்லை
இடங்கொடுப்ப தில்லை—மக்கள்
இடங்கொடுப்ப தில்லை 2

கந்தையின்றிக் கையைப் போர்த்திக்
கடுங்குளிரில் மிகுபனியில் மழையிலே—புயல்
கடுங்குளிரில் மிகுபனியில் மழையிலே
இந்நாட்டு மக்கள் வாழ
ஏக்கம் தோன்றும் நெஞ்சிலே—கொடும்
ஏக்கம் தோன்றும் நெஞ்சிலே 3

வந்துமோதும் புரட்சியெண்ணம்
மறக்கவென்றால் ஆகுமோ—சற்று
பொறுக்கவென்றால் ஆகுமோ
செந்தமிழே! உன்னையன்றித்
தீமைசாய்க்கப் போகுமோ—இந்தத்
தீமைசாய்க்கப் போகுமோ? 4

விழித்திருக்கும் வேளையும், நான்
வினைமுடிக்கும் வேளையும்—வாழ
வினைமுடிக்கும் வேளையும்
கழுத்திழுக்கக் குந்திக்குந்திக்
கவிதைபாடும் வேளையும்—தமிழ்க்
கவிதைபாடும் வேளையும் 5

பழுத்திருக்கும் மரத்தைநோக்கிப்
பறந்துசெல்லும் புட்கள்போல்—நாளும்
பறந்துசெல்லும் புட்கள்போல்
கொழுத்திருக்கும் செல்வர்இல்லம்
குறுகியோடப் பாடுவேன்—பகிர்ந்து
கொடுத்துதவப் பாடுவேன் 6

தேக்கிவைத்த பொருட்களெல்லாம்
தெருக்கொருநாள் வந்திடும்—ஆம்
தெருக்கொருநாள் வந்திடும்
ஆக்கம்வேண்டும் அறிவுவேண்டும்
அன்புவேண்டும் நெஞ்சிலே—என்றும்
அன்புவேண்டும் நெஞ்சிலே! 7

உண்டுவாழ்தல் உழைத்துவாழ்தல்
உயிரினத்தின் கடமையாம்—வாழும்
உயிரினத்தின் கடமையாம்
வண்டைப்போல ஈட்டிவைத்தால்
மக்களெல்லாம் ஊமையோ?—தேன்
வடித்தெடுப்பார் தீமையோ! 8

30-7-73

## வாயடங்க மாட்டேன்

மழையடங்கி விட்டாலும் வயல்காட்டில் வாழும்
வரித்தவளை மணிக்குறளாம் வரிப்பாடல் கேட்கும்
குழையடங்கி விட்டாலும் குமரிப்பெண் காதின்
குருத்தோலை பனையோலை குளிர்நினைவை யூட்டும்!
இழையடங்கி விட்டாலும் மாமணிகள் தம்மை
ஏற்றோர்க்கே புகழ்சேர்க்கும் இஃதுலகின் உண்மை!
கழையடங்கி விட்டாலும் உள்ளிருந்தே பாடும்
களிவண்டைப் போலென்றும் வாயடங்க மாட்டேன்! 1

கடல்படிந்த கார்மேகம் காற்றோடு கூடிக்
களித்திருந்த காலத்தும் வாயடங்க வில்லை!
உடல் படிந்த நீலநிறக் குளம்ஏரி என்றும்
ஊமையாய் இருந்ததுவோ? கரைவாழும் தென்னை
மடல் படிந்த ஓலையெலாம் நமக்கென்ன வென்றே
வாய்மூடிக் கிடந்ததுண்டோ? மறுப்பாரும் உண்டோ?
கெடல்படிந்த இவ்வுலகை மாற்றுவோன் மூடன்!
கிரிநான் பாம்பிற்கு! வாயடங்க மாட்டேன்! 2

நானுண்டு; நான்கற்ற தமிழுண்டு; போதும்!
நல்லோர்கள் வல்லோர்கள் நற்றமிழை யாத்தோர்
தேனுண்டு நான்வாழ்வேன்; சீர்சிறப்பு வேண்டேன்!
தெருவெல்லாம் ஆறுகப் புரண்டாலும் நாய்கள்
தானுண்டு மகிழாதாம்! நக்கித்தான் பார்க்கும்!
சான்றோர்வாய் பொய்த்திடுமோ? ஏமாற வேண்டாம்!
வானுண்டு கதிர்காலும் வெண்மதியம்! நாளும்
மடச்செயலைக் கண்டென்றும் வாயடங்க மாட்டேன்! 3

எனக்கெழுதும் நல்லெண்ணம் எனக்கினிமேல் இல்லை!
எழுதியதால் நான்கண்ட(து) ஏதேனும் உண்டோ?
உனக்கெழுதும் தமிழ்ப்பாடல் தமிழ்மகளே! கேட்போர்?
உலகியலை வாழ்கின்ற உயிரினத்தின் பண்பைத்
தனக்கெழுதும் பாடலெனக் கொள்வாரோ! அன்றித்
தனித்தமிழர் பண்பென்று தடம்புரண்டு போவாரோ!
மனக்கெழுதும் அமைதிப்பண் புத்துலகம் சேர்க்கும்
வாழ்விற்கு நானென்றும் வாயடங்க மாட்டேன்! 4

பாடாமல் இருக்கத்தான் நினைக்கின்றேன்; என்றன்
பாசேறித் தமிழ்ஏறிப் போய்விட்ட நெஞ்சம்!
கூடாமல் இருந்திடுமோ வெள்ளம்கூடாதோ
கொடுமைகளைப் பசியால்வாழ் ஏழைகளை எண்ணி
வாடாமல் வாழ்வதுவோ இந்நாட்டின் வாழ்க்கை?
மறத்தமிழா! இளம்புலியே! நல்வாழ்வு மண்ட
ஓடாமல் ஒளியாமல் உன்கருத்துக் கொவ்வா
உதிரிகளை உதைத்தெறிவாய்! நாமடைவோம் வாழ்வே! 5

## கணக்குத் தீர்ப்போம்

வான்பொய்த்த காலத்தும் பொய்யா ஆறு!
வளநன்செய் புன்செய்நெல் மலிந்த நாடு!
தேன்கொழிக்கும் நெடுமலைகள் மலையின் சாரல்
செறிந்தபலா மாவாழை குவிந்திருந்தும்
ஏனின்று மக்கட்குப் பசியைப் போக்க
இயலவில்லை? நம்குறையா? அரசின் போக்கா?
கூன்நிமிர்ந்த எழுகதிரைக் கண்டோம் வாழி!
கொடுமைக்கிங் கின்றோடே கணக்குத் தீர்ப்போம்! 1

பெயல்தேக்கி நீர்பாய்ச்சிக் காட்டை மேட்டைப்
பெருந்தோள்கள் வலியெடுக்க ஒவ்வோர் நாளும்
வயலாக்கி நெல்விளைப்போன் மனைவி மக்கள்
வயிற்றுக்குப் புல்லுணவு கிடைக்க வில்லை!
அயல்நோக்கி அழுகின்றார்! விளைப்போர் ஏங்க
அறுவடையைச் செய்கின்றோர் வேற்றோர் ஆவார்!
கயல்விழியே! புத்தாண்டைக் கண்டோம்! வாழி!
இன்றோடே நம்குறையின் கணக்குத் தீர்ப்போம்! 2

வற்றாத வளங்கொடுக்கும் கடலோ முப்பால்!
வருமழையைத் தடுத்தளிக்கும் மலையோ முப்பால்!
கொற்றத்தை நனிநடத்த வழிசொல் முப்பால்
கொண்டுள்ளோம்! என்றாலும் குறைகொண் டுள்ளோம்!
சுற்றத்தை வாழ்விக்கும் கதிரைக் கண்டோம்!
தொடுவான இருளினிமேல் தொலைந்தே போகும்!
பெற்றுவளர் தாய் நாட்டின் நலத்தை எண்ணாப்
பெரியோரை இன்றோடே கணக்குத் தீர்ப்போம்! 3

கடல்கடந்து கலஞ்செலுத்திக் கடாரம் வென்ற
கதையெல்லாம் கல்வெட்டுச் சொல்லக் கேட்டும்
உடல்சிறியர் நமையேய்க்கப் பார்க்கின் றார்கள்!
நாமெல்லாம் ஊமையென்ற நினைவு போலும்!
மடல்பெரிதே என்போர்க்கே மகிழம் பூவின்
மணம்பெரிதை நினைவூட்டும் மறவர் கூட்டம்!
படர்இருளைக் கிழித்தெறியும் பரிதிவாழ்த்திப்
பழமைக்கிங் கின்றேடே கணக்குத் தீர்ப்போம்! 4

வாளேந்தி அரசாண்ட முன்னாள் வேந்தர்
மடியிருத்தித் தாய்மொழியை வளர்த்துக் காத்தார்!
தோளேந்தி வறுமையினைத் துடைத்த தாலே
தொன்னூலைப் பெரும்புலவர் படைத்தார்! இன்றோ
கோளின்றிக் குறைமொழியைக் கேட்டே ஏற்றுக்
குடிகெட்டோம்! எழுகதிரைக் கண்டோம் வாழி!
மீளாத கொடுந்துயரம் மீள வேண்டும்!
விரைவாக இன்றேடே கணக்குத் தீர்ப்போம்! 5

தாய்நாடும் தாய்மொழியும் வாழ வேண்டும்!
தலைநிமிர்ந்து மற்றவர்போல் நடக்க வேண்டும்!
காயாத வானத்தும் கதிரைச் சேர்க்கும்
விஞ்ஞானக் கல்விவளம் கற்க வேண்டும்!
ஓயாது தாயகத்தின் உயர்வுக் காக
உயிருள்ளோர் யாவருமே உழைக்க வேண்டும்!
வேய்மலையின் எழுகதிரைக் கண்டோம் வாழி!
விரைவாகக் குறைமுடிக்கக் கணக்குத் தீர்ப்போம்! 6

---

17-12-66

## பரவட்டும் தீயே!

கார்பொய்த்த காலத்தும் நீர்பொய்க்கா நாடு!
கல்துளைத்துக் கலைவளர்த்து நெல்விளைத்த நாடு!
கூர்பொய்த்த வேலெடுத்தும் பகைவெட்டிச் சாய்த்த
குன்றுநிகர் தோள்மறவர் வாழ்ந்ததிரு நாடு!
சீர்பொய்த்துப் போனதுவோ? அந்தந்தோ அந்தோ!
செந்தமிழர் நிலைஇதுவா? இந்நிலையை மாற்றப்
பேர்பொய்த்துப் போகாமுன் எழுந்தோடி வாரீர்!
பிற்போக்கு நிலைமாறப் பரவட்டும் தீயே! 1

முல்லைக்குத் தேர்ஈந்தான்; முன்பாடி வந்த
முத்தமிழ்ப்பா வாணர்க்குத் தன்னுட்டை ஈந்தான்
இல்லையென்ற சொல்லுக்கே இடமில்லை அந்நாள்
இன்மருந்தும் அயலவர்க்குப் பங்கிட்டே உண்டான்!
பல்வளமும் நிறைந்திருந்தும் தாயகமே! மக்கள்
பசிநோயால் வாடுவதோ? இந்நிலையை மாற்ற
எல்லோரும் புறப்படுவோம்! புத்துலகம் காண
எங்கெங்கும் பரவட்டும் பரவட்டும் தீயே! 2

படைபெருக்கி வளம்பெருக்கிப் பலதொழிலும் கண்டு
பண்போடு கலைவளர்த்து வெற்றிமுரசு சார்த்துக்
கடல்கடந்து புகழ்நட்டோம் முன்னுளில்! அந்தக்
கதையெல்லாம்வெறுங்கதையா?கடாரம்சொல்லாதா?
வடக்கினிலே படைதேக்கி வடஎல்லை தாண்டி
வந்தபகை இன்னும்முன் வரஎண்ணும் ஈனக்
கொடும்பகையை முறியடிப்போம்! கோழைகளா மக்கள்?
கொழுந்துவிட்டுப் பரவட்டும் பரவட்டும் தீயே! 3

அறநூலும் பொருள்நூலும் அள்ளியள்ளி ஆன்றோர்
அலைகடல்சூழ் உலகிற்கே அளித்துவந்த துண்டே!
மறத்தோளர் முடிமன்னர் வாழ்ந்திருந்த நாளில்
வாழ்ந்திருந்த வளம்எண்ணில் மனம்கொதிக்குதந்தோ!
அறம்பிழைத்து வாழ்ந்ததில்லை! ஆனாலும் இன்றோ
அவையாவும் பழங்கதையாய் ஆக்கிவிட்டார் மக்கள்!
சிறந்தோங்க வழிசெய்வோம்! செயல்மறவர் தேவை!
தீயெங்கும் பரவட்டும்! பரவட்டும் தீயே! 4

வாழாத காலத்தில் நல்வாழ்வு வாழ்ந்தோம்!
வந்தவர்க்கிங் கிடங்கொடுத்தோம் விரிந்தமனப்
பண்பாம்!
ஆழ்கடலில் முத்தெடுத்தோம்; அயல்நாட்டிற் கீந்தோம்!
அகில்தேக்குச் சந்தனமும் அளித்துதவி வந்தோம்!
ஈழத்தில் கொடிநட்டோம்; ஈழஉற வானோம்!
இன்றுள்ள நிலையென்ன? இதுதானா நேர்மை?
கோழையா நாமெல்லாம்? கொல்புலியின் போத்து!
கொழுந்துவிட்டுப் பரவட்டும் பரவட்டும் தீயே! 5

தென்னகமே! தாய்நாடே! தீந்தமிழர் வாழ்ந்த
திரைகடல்சூழ் பொன்னாடே! என்நாடே! வாழ்க!
முன்னோர்கள் தோள்வலியால் அறிவாற்ற லாலே
முத்தமிழே செழித்தோங்கி அரசோச்சி வந்தாய்!
இந்நாளில் இந்நிலையில் இறக்கிவைத்த கீழோர்
இருந்தென்ன? இறந்தென்ன? ஆன்றோர்கள் வாழ்ந்த
பொன்னான தமிழ்ச்சங்க காலத்தைக் காணப்
புதுமைத்தீ பரவட்டும் பரவட்டும் இன்றே! 6

12-12-'64

## ஆக்கம் சேர்ப்போம்!

உண்ணுவதும் உறங்குவதும் பெரிய தொழிலாய்
வார்ப்பேச்சுப் பேசிக்கா லங்கடத்த மாட்டோம்!
பெண்ணொருத்தி சிக்கனமாய்ச் சேர்த்த பொருளைப்
பிள்ளையன்றிப் பிறரடைய மனஞ்சகிப் பாளோ?
மண்ணரசி தமிழன்னை ஈன்றமக் கள்நாம்!
வழக்கப்படி நாமலவோ ஆளப் பிறந்தோர்?
கண்ணொளியாம் நம்தமிழர் நாடு நமக்கே
கண்ணிழந்து வாழ்வதினும் வீழ்வது மேலாம்! 1

தலைசாய்த்துக் கைகட்டி மான மிழந்து
தலைவணங்கிப் பிறர்க்கேவல் செய்ய மாட்டோம்!
மலைநாட்டுக் குறவரைப்போல் எங்கும் திரிவோம்
மண்கிளறிக் கிழங்குண்டு வாழ்ந்து வருவோம்
சிலைவலியால் இமயம்வரை வெற்றி பரப்பிச்
செந்தமிழைக் காத்தசேரன் சொந்த மக்கள்நாம்
அலைகடலின் வழிவந்து நம்மை விழியால்
அடிமைகொண்டாள் அன்னியப்பெண் அழிந்தோம்
மண்ணில். 2

பண்டைத்தமிழ் நாட்டுணர்வை நாளும் வளர்ப்போம்
பழமையினில் புதுமையெனும் மெருகைக் கொடுப்போம்
அண்டைஅய லார்நம்மைக் கண்டு நகைத்த
அந்தக்காலம் போனதின்று வந்தது நன்னாள்!
கெண்டைவிழிப் பெண்ணினத்திற் கின்னல் புரியும்
கொழுக்கட்டுப் பாட்டைநல் அறிவால் தீய்ப்போம்
சண்டைசெய்யும் மேனாட்டு வீணர் நாமலோம்
சன்மார்க்க மேயுயிராய்ப் பூசனை செய்வோம்

சீரழிந்த சிற்பமுதல் நாட்டியக்கலை
சித்திரமும் கைத்தொழிலும் மெத்த வளர்ப்போம்
பார்மொழிகள் அத்தனையின் தேனைப் பிழிந்து
பலகவிதை சிறுகதைகள் தமிழில் குவிப்போம்
ஆர்விழியார் பெண்ணினத்தின் கற்பை நிறைப்போம்
அண்டமும் பிளக்கஇரு தோளை வளர்ப்போம்
நேர்வழியாம் சத்தியத்தின் நெறிதவறிடோம்
நீர்க்குமிழி யாய்உடலை நெஞ்சதில் காப்போம் 4

## தமிழா அஞ்சாதே!

அஞ்சாதே தமிழா! நீ
அஞ்சாதே தமிழா!

தஞ்சமென ஒருநாளும் பிறர்க்கீழ்த்
தலை சாய்த்திடு வழக்கம்
நஞ்சினும் கொடிதென நெஞ்சத்தில் காத்தான்
நம் நாட்டுத் தமிழன்

மஞ்சு பொழிந்து உயிர்க் குணவாகி
மா நிலம் காத்திடுதே!
சஞ்சல மெதற்கு இயற்கையாம் அன்னை
தருவாள் உன் பசிக்கே!

கொஞ்சிடு மக்கள் மனைவி முகத்தில்
குலவிடு புன் முறுவல்.
வஞ்சகர் நெஞ்சைப் பிளந்திடு வண்மை
வாளெனப் பெற்று விட்டாய்!

கஞ்ச மலர்முகத் தமிழ்த்தாய் வாடக்
காணு திருப் பாயோ?
அஞ்ச விலைஇனித் தனித்தமிழ் நாடு
ஆளுகை உன்ன தடா!

நெஞ்சினில் வீரம் கையினில் வில்மீன்
நீள்புலிக் கொடி யுயர்த்தி
அஞ்சலி செய்வாய் தமிழா! தமிழர்
ஆவியின் சின்ன மதே!

## சுட்டுப் பொசுக்குவாய்!

நச்சரவாம் அன்னிய நரகன் அழிந்தனன்
நாட்டிலே! தமிழ் நாட்டிலே!
அச்சம் அழிந்தது எண்ணெய்தலை தேய்த்தே
ஆடுவாய் நீர் ஆடுவாய்!

புத்தம் புதுக்கதராடை யுடுத்திநீ
பூவையே! தமிழ்ப் பாவையே!
தித்திப்பு காரம் தோசைமுதல் உண்டு
தெருட்டுவாய் அடிமை வெருட்டுவாய்!

எத்துணை ஆயிரம் நரகரெதிர்ப்பினும்
இல்லையே! பணித லில்லையே!
சத்திய பாமை நம்நாட்டுப் பெண்ணுமே!
தையலே தமிழ்த்தை யலே!

வெற்றித் தீபாவளி வாழ்க வாழ்கவென்று
வெடிசுடு சீன வெடிசுடு
நற்றமிழ்ப் பெண்க ளடிமைத் தளையினை
நசுக்குவாய் சுட்டுப் பொசுக்குவாய்!

## எத்தனை நாள் துணைக்கு நிற்கும்?

நாட்டுக்கு நலம்பயக்கும் நல்லறிவை இந்நாட்டுக்
குழந்தை கட்கே
ஊட்டுகின்ற கணக்காயர் தம்மக்கட் குணவூட்ட
வாய்தி றந்தார்
நீட்டுவதா துப்பாக்கி இப்போக்கிங் கெத்தனைநாள்
துணைக்கு நிற்கும்
பாட்டுக்கும் அறிவொளிக்கும் பணியாத எந்நாடும்
உருப்ப டாதே! 1

இந்நாட்டுக் குழந்தைகளை எதிர்காலப் போர்ப்படையை
ஆட்சித் தூணை
பொன்னாக்கித் தருவதுவும் புலியாக்கி விடுவதுவும்
யாரின் வேலை?
முன்னாளில் இன்றுள்ளோர் கையாண்ட முறைபற்றிப் பார்
இவர்கள் செய்தார்கள்
பின்னென்ன முழுகியது துப்பாக்கி எத்தனை நாள்
துணைக்கு நிற்கும்? 2

கணக்காயர் மனம்வைத்தால் கடுங்கோலும் சீர்குலையும்
கரம்பூப் பூக்கும்;
பிணக்கென்ன செய்துவிட்டார்? பெரும் பசியின்
நிலைசொன்னார் இதுவா தப்பு?
குணக்கடலா பொங்கியது? குறைகேட்க இன்றுள்ளோர்
முனைந்தால் என்னும்?
உணவுக்கு வழிசெய்யா எந்நாடும் எந்நாளும்
உருப்ப டாதே! 3

## புதிய உலகம்

புதிய உலகம் செய்வாய்! தமிழா!
புதுமை வெறியூட் டெழுந்திரு! தயக்கமேன்?
விதிவிதி என்பது வீணர்சொல்! தள்ளு!
வீரமும் மானமும் உயிரெனக் கொள்ளு! 1

மண்வாழ் உயிரினுள் தாழ்வுயர் வேது?
வகுத்தபல் சாதி ஒருசிலர் சூது!
பெண்ணினம் தாய்மையாம் பழிக்காதே போற்று!
பெற்றதாய் நாடுன்றன் சொத்தெனச் சாற்று! 2

ஆற்றுப் பெருக்கெதிர்த் தேறிடு மீன்போல்
எதிர்த்தழி மூடப் பழக்கத்தை வாழ்வில்!
மாற்றிடு உலகினை மக்களின் அரசராய்!
மழைதரு செல்வம் உயிர்க்கெலாம் பொதுவாய்! 3

பிச்சை எடுப்பவர் இந்நாட்டி லில்லை!
பேச்சைத் தடுப்பவர் எவருமே இல்லை!
இச்சைப் படும்பொருள் இளங்கதிர்த் தென்றல்!
இனிய குயிலிசை மேற்றிசைச் செவ்வான்! 4

தமிழ்மது வெறியினில் ஆடுவார் மக்கள்!
கட்டாயத் தொழிற்கல்வி நாடுவார்! சந்தம்
கமழ்மணச் சோலையும் வாவியும் இன்பக்
காட்சிப் பொருளென்று தேடுவார்! 5

உச்சி இடிந்து பொசுக்கினும், மேரு
உலகம் வெடித்து விழுங்கினும் இனி
அச்சமில்லை புதுநாட் டினிலே!
அடிமைச் சுமை இல்லை வாழ்வினிலே! 6

## தொண்டு செய்

தாயென்று சொல்லுவாய்; தந்தையென் பாய்நீ
சந்தைக்குச் சென்ற துண்டோ?
தாயிற்சி றந்தது தாய்நா டென்றுநம்
தமிழர்கள் வாழ்ந்து வந்தார். 1

பெண்டென்று சொல்லுவாய்; பிள்ளைஎன் பாய்நீ
பேச்சிற்ச லிப்ப தில்லை
தொண்டுசெய் நம்தமிழ் நாடே சிறந்தது
துயர்சேர்க்கும் பெண்டு பிள்ளை. 2

கைப்பொருள் தேடி ஓடி அலைந்தனை!
காதற்ற ஊசி இல்லை
மெய்ப்பொருள்நீ தேடு! நாட்டின் விடுதலை
வேறொன்றும் வேண்டாம்! வேண்டாம்! 3

நாட்டிற்குச் செய்தது எத்துணை என்றுநீ
நாளும்நி னைத்த துண்டா?
காட்டிற்குச் செல்லும் கிழமையுற் றுயுன்
காளைப் பருவ மெங்கே? 4

பற்றைவிலக் கென்று சொல்லுவார் சொல்லுக!
பற்றிக்கொள் நாட்டுப் பற்றை!
உற்றதுயர் போக்க உழைத்திடு வாயடா!
உன் நாடுன் பாட்டன் சொத்தே! 5

## செயத் தக்க செய்

இருள்திரையைக் கிழித்தெறிந்தான் கீழ்த்திசையில் பரிதி
ஈடற்ற திராவிடத்தின் தந்தைபெரி யார்போல்!
உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் இனியஞ்ச வேண்டாம்
ஊமைகளாய் நம்நாட்டார் திராவிடர்கள் பணியால்
கருகிவிட்ட மொட்டுகளாய் வாழ்ந்திருந்த காலம்
கலைந்தோடு கார்போலத் தொலைந்தோடிற் றின்றே
திருமிக்க திராவிடனே! நீநாட்டை ஆள்வாய்!
தைபிறக்க வழிபிறக்கும் செயத்தக்க செய் 1

கரும்பாலை சுற்றுகின்ற முதுகாளை போலக்
கடவுளென்ற மேற்பூச்சில் பொய்க்கதைகள் சொல்லி
இரும்பாக்கி ஞர்மனத்தை ஆறலைக்கும் கூட்டம்
இழிவுசெய்தார் பெண்குலத்தைக் கலைமொழியை வாழ்வை;
மருந்திரண்டு நான்கண்டேன்; திராவிடனே! சொல்வேன்
வாழ்வதற்கும் உன்நாட்டை நீஆள்வ தற்கும்
கரும்புமொழி யார்உயர்த்து; ஆரியத்தை நீக்கு!
தைபிறக்க வழிபிறக்கும்! கையாண்டு பாராய்! 2

குளம்கோயில் திறந்துவிட்டால் குலம்ஒழியு மென்றே
கொண்டுவந்தார் ஆளவந்தார் புதுச்சட்டம்; மக்கள்
உளம்மாறக் காணோமே! இதற்கென்ன செய்வார்
ஊறிவிட்ட ஆரியத்தை வேரோடு கல்ல
இளந்தமிழா! திராவிடனே! நீஎழுவாய் இன்னே!
இதுவன்றோ செயவேண்டும்; மற்றவைகள் வீணே!
வளமான தைபிறக்க வழிபிறக்கும் தம்பி!
மகிழ்வோடு எதுவரினும் செயத்தக்க செய்வாய் 3

வயலெல்லாம் நெற்கதிர்கள் பாலேறிச் சாய்ந்து
வாராத தலைபோல மடிந்துபின்னிக் கிடக்கும்
துயரெல்லாம் மாய்ந்ததெனை எண்ணமிட்டாய் அந்தோ!
தொந்தியப்பர்க் கதுசொந்தம்; உனக்கென்ன உரிமை?
புயல்போலப் பெரும்புரட்சி செயவேண்டும் நாட்டில்
புதுவாழ்வை நீயடைய உன்நாட்டை ஆளத்
தயங்காதே! திராவிடனே! விரைந்தெழுவாய் இன்னே!
தைபிறக்க வழிபிறக்கும்! செயத்தக்க செய்யே! 4

## உனக்கேன் இல்லை அக்கவலை

விண்ணும் மண்ணும் விரிகடலும்
வெவ்வே றென்றே மனிதனை
எண்ணம் முதிர்ந்த இந்நாளில்
உனக்கேன் இல்லை அக்கவலை?
மண்ணின் விடுதலை பிறப்புரிமை!
மகனே எழுவாய்! போர்முரசும்
விண்ணும் அதிர அறைவாய்நீ!
விடுதலை! தாயகம் விடுதலையே! 1

அண்டை அயலில் வாழ்ந்திடுவோர்
அத்தனை பேரும் மானிடரே!
சண்டை சச்சர வில்லாது,
தாயக விடுதலை வேண்டாது,
மண்டே இட்டே ஒருநாடாய்
வாழ்தல் எங்கு நீ கண்டாய்?
முண்டி எழுவாய்! போர்முரசம்
முழக்கு! தாயகம் விடுதலையே! 2

சொல்லைக் குண்டே தனிவரப்பு!
குளத்துக் குண்டே பெரியகரை!
எல்லைக் கோடு நாடெங்கும்
இருக்கக் கண்டும் என்செய்தாய்?
பல்லைக் காட்டி உனைஏய்க்கப்
பசப்பும் வார்த்தை ஒருநாடு
சொல்லக் கேட்பாய்! போர்முரசம்
தூக்கு! தாயகம் விடுதலையே! 3

தனித்து வாழ்ந்தால் தமிழ்வாழும்!
தரளம் பொன்னும் நமதாகும்!
இனித்த கலைகள் கைத்தொழில்கள்
எங்கும் நிறையும்! வாழ்வுயரும்!
குனித்த பார்வை இனிவேண்டாம்!
கொட்டி முழக்குப் போர்முரசம்!
மனித்தப் பிறப்பின் உயிர்மூச்சு
தாயக மண்ணின் விடுதலையே!

## வாழ்க்கை

நம்பிக்கை யின்பிறப்பே நல்வாழ்க்கை உண்மை!
நான்சொன்ன புதுமையில்லை; பலர்கண்ட ஆய்வாம்!
தும்பிக்கை யானைநாம் தொழுதெழுந்தால் நூலின்
தொல்வளனும் பெருஞ்சிறப்பும் தன்புலமை ஊற்றின்
தெம்பிழக்கச் செய்ததெது? நான்சொன்னால் நீங்கள்
திசைதிருப்ப ஏதேதோ சொல்லிடுவீர் என்மேல்!
வம்புக்கே வந்திடுவீர்! வந்தாலும் நானோ
மறப்புலியே என்றென்றும்! நீர்மறக்க வேண்டாம்! 1

என்மகளின் மாதரியின் அழகொளிரும் நீண்ட
எழில்மாட முன்றில்லில் ஏதேதோ எண்ணிச்
சின்ன இளம் சிறுகுருவிச் சிட்டினையர் கூட்டச்
செந்தமிழைக் கேட்டிருந்தேன்; அகப்பொருளைக்கேட்டேன்!
முன்னவர்கள் அகப்புறத்தை நமக்களித்த மேலோர்
முதறிவை நான்எண்ணி வியக்கின்ற நேரம்
பின்வந்தாள் என்பெயர்த்தி பொன்னரசிக் குட்டி
பேரிடியில் எனை அணைத்தாள்; இதுதானே வாழ்க்கை! 2

வாழைமடல் பார்த்திருந்தேன்; வாழைமரப் பூக்கள்
வரிசையைநான் பார்த்திருந்தேன்; அப்பூக்கள் காயின்
சூழலைநான் பார்த்திருந்தேன் கொல்லருலை வந்த
துளைதுளைக்கும் உளியங்கள் நான்கண்டேன்; வாழ்வின்
தாழ்நிலையைப் போக்குதற்கு யாரிங்கு நல்ல
தடைக்கல்லைப் பெயர்த்தவர்கள் சொல்லட்டும் கேட்போம்
ஏழையில்லை; செல்வரில்லை; என்கின்ற என்றன்
இக்கொள்கை நிலைநாட்டல் என்வாழ்க்கை நோக்காம்! 3

நான்குறிஞ்சி நிலத்தினிலே பிறந்தவனும் இல்லை!
நல்லருவி பாய்ந்துவரும் நல்லருவிச் சாரல்
தேன்குறிஞ்சிப் பூவாடும் பொறிவண்டும் இல்லை!
தென்பொதிகைத் தமிழ்த்தென்றல் நான்இல்லை; இல்லை!
வான்குறிஞ்சி முழுநிலவின் மையத்தைத் தேடி
வருகின்ற வாலறிவோ எனக்கில்லை கண்டீர்!
மான்குறிஞ்சி பாலையிலே நான்கண்ட துண்டு!
வாழ்க்கையெனில் இன்பதுன்பம்! நம்பிக்கை வேண்டும்! 4

ஏடெடுத்தே எழுதத்தான் நினைக்கின்றேன்; என்றன்
எழுத்தினில்நல் சீர்பெற்றுத் திருப்புழை பெற்றுப்
பாடெடுத்தே வருகின்ற பல்லோர்கள் என்றன்
பனிமலையின் குளிர்அருவி நலன்வாழ்த்தும் என்றன்
நாடெடுத்த எனதாசான் பாவேந்தன் தந்த
நற்கவிதை தனித்தமிழில் நாலூறும் செந்தேன்!
கூடெடுத்தே நோய்நொடியை இந்நாட்டில் வாழ்வோர்
குறைமுடிக்க நினைக்கின்றேன்! அதுவேஎன் வாழ்க்கை! 5

## பாவியற்றும் பயிற்சிபெற வேண்டும்

சிட்டிணைகள் முன்றிலிலே தாவ—வீட்டுச்
சிறுகன்று தாய்நினைந்து கூவத்—தேடிக்
கட்டிளைஞன் தென்னகத்தான்
கைகுவித்து வணக்கமென்றான்; தின்றான்!
கனியைத் தந்தான்! 1

'தமிழருவி' ஏடெடுத்துப் பார்த்தேன்—பண்டைத்
தமிழ்வாழ்வை எண்ணியெண்ணி வேர்த்தேன்—இன்று
தமிழிளைஞர் முனைந்துவிடில்
தமிழ்நாடும் தாய்மொழியும் வாழும்
யாவும் சூழும்! 2

நல்லதமிழ் நூலோத வேண்டும்—அதில்
நன்மைபல கற்றாய வேண்டும்—தமிழ்ப்
பல்கலையைப் பலநாட்டில்
பரப்புதற்குத் தமிழ்இளைஞர் யாண்டும்
முயலல் வேண்டும் 3

முன்னவர்கள் வாழ்வெண்ண வேண்டும்—வீசி
முன்நடந்து செயல்முடிக்க வேண்டும்—இளந்
தென்னவர்கள் துள்ளியெழின்
பின்னவர்கள் போய்ஒளிவார் காடே!
அடைவோம் வீடே! 4

பாவியற்றும் பயிற்சிபெற வேண்டும்—எழில்
பார்த்தெழுதும் பயிற்சிபெற வேண்டும்—தமிழ்க்

காநுழைந்து தேனெடுத்துக்
கடல்கடந்தும் யாவருக்கும் தருவோம்!
பெருமை பெறுவோம்! 5

பாட்டிசைக்கப் பயிற்சிபெற வேண்டும்—ஈப்போல்
பாடுபட்டு வளம்சேர்க்க வேண்டும்—கொடும்
காட்டெருமைக் கஞ்சாது
நாட்டுவளம் பொதுசெய்தே உண்போம்!
யாவரும் உண்போம்! 6

மற்றவர்போல் வளர்ச்சிபெற வேண்டும்—எனில்
வகைவகையாய்ப் படித்துயர வேண்டும்—விண்
சுற்றிவரப் பணைநொறுக்கத்
தொழில்நுணக்கம் விஞ்ஞானம் வேண்டும்
கற்க வேண்டும்! 7

"தமிழருவி" தருவளத்திலே—புவி
தழைத்துநனி செழித்ததுமுன் னாளே—செந்
தமிழ்க்கலையும் தமிழினமும்
தமிழருவி தருவளத்தி னூடே
வாழ்க நீடே! 8

---

20—10—68

## இதுவா ஆட்சி?

கெட்டுநொந்து வாழ்ந்திருந்தார் ஆட்சி ஏற்றார்;
கேடில்லை நாட்டிற்கென் றெண்ண மிட்டோம்,
விட்டேறும் வெள்ளையனே மேலாம் என்று
மெய்ப்பிக்கத் துணிந்திட்டார் ஆளவந்தார்;
பட்டினியில் வாடுகின்ற ஏழைக்காகப்
பரிந்தன்று பலபேசி எதிர்த்து நின்றார்
பட்டினியென் றுலின்றே ஆளவந்தார்
பார்க்கின்றார் வேறெங்கோ! இதுவா ஆட்சி? 1

பிறர்க்கின்று செய்யாமல் நாங்கள் நாட்டை
ஆண்டிடுவோம் என்றன்று பேசி வந்தார்
பிறர்க்கின்று; நமக்கென்ன? என்று நாட்டைப்
பெற்றவுடன் நினைக்கின்றார்; இதுவா ஆட்சி?
பொறுப்பேற்றார் தமிழ்நாட்டில்; தமிழுக் காகப்
பொன்முடியை எதிர்பார்த்தோம்; எங்கள் நெஞ்சில்
வெறுப்பேற்றிக் காதறுந்த செறுப்பாம் இந்தி
மேலென்று கொண்டுவந்தார்; இதுவா ஆட்சி? 2

பேச்சுரிமை எழுத்துரிமைக் காக அந்நாள்
பெருங்கிளர்ச்சி செய்துவந்தார் ஆள வந்தார்
பேச்செழுத்து நாடகத்திற் கிவர்கள் இன்று
பெரும்பூட்டுப் போடுகின்றார்; இதுவா ஆட்சி?
வீச்சுக்கும் தடியடிக்கும் ஆள வந்தார்
மிகுபொறுமை காட்டிநின்றார்; உரிமைக் காகக்
கூச்சலென்றால் தொழில்நிறுத்தக் கூட்டம் என்றால்
குண்டுகல்பா ழாக்குகின்றார் இதுவா ஆட்சி? 3

சிற்றூரில் வாழ்கின்ற உழவர்க் காகத்
தெருவெல்லாம் பள்ளிசெய்வோம் என்றார் ஆள்வோர்;
சிற்றூரை விழிப்பூட்டும் கணக்கா யர்க்குப்
பசியென்றால் சீறுகின்றார் ஆள வந்தோர்;
உற்றபசி இங்கொருவர்க் குண்டென் றாலோ
உருக்குலைப்போம் கொடுமையினை என்றார் ஆள்வோர்
நற்றமிழர் உயிர்வாட்ட உணவை ஒவ்வோர்
நாடோறும் குறைக்கின்றார்; இதுவா ஆட்சி? 4

## வறுமை

வறுமையைப் பாடென்றான் வந்தொருவன்! அந்த
வந்தவனே வளர்தாடி நரைமீசைக் காரன்!
சிறுமையை நான்போக்க வாழ்கின்றேன்; என்றன்
செயலினிலே சிறுகடுப்பும் நான்கண்ட தில்லை;
மறுமைக்கே வாழ்கின்றேன்; மனையறத்தில் ஈன்ற
மக்களின்மேல் பற்றில்லை; பரிவில்லை என்றான்;
பொறுமைக்கே எல்லையுண்டாம் வாய்மூடி நின்றேன்!
புல்லுருவி யால்நாடு புதுமைகண்ட துண்டோ? 1

மண்மண்டி மனமுருளிரின் ஒளிமண்டிச் சேர்த்த
வாழ்க்கைதான் வறியோரின் இன்றுள்ள வாழ்க்கை!
புண்மண்டி வாழ்வதல்லால் போக்கிடந்தான் உண்டோ?
புத்துலகம் புதுவாழ்வு புதுநோக்கம் என்றே
விண்மண்டி வருகின்ற இளந்தென்றல் போல
வெல்லத்தைத் தடவுவதே இன்றுள்ள ஆட்சி!
கண்மண்டிக் காரிருள்வாழ் கல்லாத மக்கள்
கதிர்ஒளியில் களிப்பினிலே வாழ்வதுதான் வாழ்க்கை! 2

செல்வந்தர் பெருந்திருட்டே இன்றுள்ள நாட்டின்
சிறுமைக்கும் வறுமைக்கும் அடிப்படையாம்! ஆன்ற
செல்வந்தர் பலதுறையில் தூயதமிழ் பாடித்
துறைதோறும் துறைதோறும் தொகுத்துரைத்தும் என்றும்
மல்வந்தார் எழுச்சிபெற்றால் வறுமை யறக் கூடும்!
வழியிதுதான்! மாற்றுவழி தென்படவே இல்லை!
பல்வந்தார் குழந்தைகளின் பண்பாக்க வல்ல
படிப்புணர்த்தும் கணக்காயர் வறுமைக்கும் மாற்றும்! 3

காஇனிக்கப் பாடுகின்ற குயிலினத்தைப் போலக்
கசிந்துருகிக் கைப்பொருளைக் கவர்கின்ற ஈனர்
மாஇனிக்க மாப்பிசைந்து வழங்குகின்ற எத்தன்
வாழ்கின்றான்; வறுமையற்று வளம்செழிக்கப் போமோ?
பாஇனிக்கப் பாடுகின்றான் பாவலோன்; அந்தப்
பைந்தமிழன் வறுமையினை எவன்கண்டு கொண்டான்?
நாஇனிக்கப் பொதுமேடை ஒலிபெருக்கி முன்னர்
நான்என்பான்; நம்பிக்கை வைத்தெடுத்துப் போவான்! 4

பிறப்பினிலே தாழ்ந்தஉயிர் உயர்ந்தஉயிர் இல்லை!
பின்வந்த சரக்கிதுவாம்; அறிவற்று ஏற்றோம்!
பிறப்பினிலே வறுமைவந்தே உடன்தொடர்ந்த தில்லை!
பின்வந்த சரக்கிதுவாம், திருடர்களின் செய்கை!
பிறப்பினிலே உயிரினங்கள் யாவையுமே ஒன்றும்!
பேச்சில்லை வறுமைக்கே கொடுவாளைத் தூக்கே!
இறப்பினிலே யார்வந்தார்? எதைஎதையோ கண்டார்!
எடுவாளை தயங்காதே வறுமைக்கு மாற்றே! 5

வெட்டரிவாள் கையெடுத்தால் வேற்றுமைஇங்குண்டோ?
வீரத்தைக் காட்டாமல் வீழ்வதுவோ வாழ்வு?
கட்டரிவாள் எடுத்துத்தான் நன்செய்நெல் அறுத்தே
களத்தினையே கண்டவன்நீ மறந்தாயோ! வறுமை
முட்டரிவாள் தேக்கியவன் என்றும்நம் நாட்டின்
வறுமையைத் தேக்கியவன் வாழவிடு வாயோ?
சுட்டரிவாள் எத்தர்கள்! தூக்கிமண் பூத்த
குளத்தினிலே துவைத்திடுவாய் வறுமைக்கு மாற்றே!

## கன்னலடி! கைப்பதில்லை!

வெந்துபூத்த அந்திசாயும்
படரிருள் நேரம்—அவன்
வந்திருந்து காத்திருந்தான்
குளக்கரை யோரம்! 1

பட்டிமகன் கட்டிவெல்லம்
எட்டி இருந்தான்!—விழி
விட்டுவிட்டுத் தூதனுப்பிக்
கிட்டி யமைத்தான்! 2

மெல்லவந்தான் சொல்லளந்தான்
பல்லைக் காட்டினான்!—மலர்க்
கொல்லையிலே வண்டுமொய்க்கக்
குளிர்ந்து நோக்கினான்! 3

மைக்குழலில் பூத்தமுல்லை
மலரைச் சூட்டினான்!—வளைக்
கையிழுத்து மெய்யணைத்துக்
கன்னம் கிள்ளினான்! 4

மேலாடை காற்றலைக்க
வெட்கிக் குனிந்தேன்!—அவன்
பாலாடை நூலாடை
பற்றி இழுத்தான்! 5

அங்குமிங்கு மாகஎட்டிப்
பார்த்துச் சிரித்தான்!—வளச்
செங்குமுதத் தேன்மலரின்
மொட்டு விரித்தான்! 6

இங்கிருப்போர் அங்கிருப்போர்
என்ன நினைப்பார்?—வெயில்
மங்கவில்லை சங்கையில்லை
என்று வெறுப்பார்! 7

முன்னிலவு பொன்னரிவாள்
முளைத்ததே என்றேன்!—அவன்
கன்னலடி கைப்பதில்லை
கைவிடேன் என்றான்! 8

---

25—9—71

கவிஞர்க்குக் காதலி ஒருத்தி இருந்தாள். அவள் கவிஞரை விட்டு விலகிச் சென்றுவிட்டாள். அக்காலத்தே அவளை நினைத்துப் பாடிய பாடல்கள் இவை!

## நீயும் நானும்

சாந்துக் கல்லடி நீயெனக்கு!—நல்ல
சந்தனக் கட்டை நானுனக்கு!
தீந்த மிழடி நீயெனக்கு!—இன்பத்
திருக்குறளடி நானுனக்கு! 1

முல்லைக் கொடியடி நீயெனக்கு!—ஏற
முளைத்த மரமடி நானுனக்கு!
அல்லிப் பூவடி நீயெனக்கு—தேன்
அள்ளும் வண்டடி நானுனக்கு 2

குட்டைப் புதுமலர் நீயெனக்கு!—பாசிக்
குளத்து நீரடி நானுனக்கு!
வட்ட நிலவடி நீயெனக்கு!—நீல்
வானப் பரப்படி நீயெனக்கு!— 3

மாந்தளிர்த் தோப்பு நீயெனக்கு!—இசை
வரிக்குயிலடி நானுனக்கு!
தாமரை மொட்டடி நீயெனக்கு!—வானத்
தங்கப் பரிதி நானுனக்கு! 4

ஆடும் மயிலடி நீயெனக்கு—வான்
அடர்ந்த முகிலடி நானுனக்கு!
ஓடும் காவிரி நீயெனக்கு!—முத்தம்
உமிழும் கடலடி நானுனக்கு! 5

குத்து விளக்கடி நீயெனக்கு!—நெய்க்
கொழுந்துச் சுடரடி நானுனக்கு!
தித்திக்கும் பாட்டடி நீயெனக்கு!—பொருட்
செறிவின் சுவையடி நானுனக்கே! 6

8—2—64

## அவள் வேண்டும்!

அவள் வேண்டும்! அவள் வேண்டும்!
அவளே வேண்டும்!
பவளஇதழ் தவளநகைப் பசப்புக்காரி!
பெருங் குறும்புக்காரி! 1

முழுநிலவோ முகந்தானோ தாமரையோ
முகத்தில் பூத்த—செங்
கழுநீரோ கயல்தானோ கூர்விழியோ?
கற்கண்டோ செஞ்சொல்? 2

மான்தானோ! மயில்தானோ! மடப்பிடியோ!
வானில் பூத்த—ஒளித்
தேன்நிலவோ! தென்றலிளம் பூங்காற்றோ!
சிரிப்புக் காரி! 3

வெட்டி வெட்டிக் கண்சிமிட்டும் நெட்டுக் காரியோ!
வெண்ணிலவில் குங்குமம்சேர் பொட்டுக் காரியோ!
செட்டுக்காரியோ! தமிழ்மெட்டுக் காரியோ! நெஞ்சைத்
தொட்டுத் தொட்டுப் போய்மறையும் துடுக்குக்காரியோ? 4

தொட்டெடுக்க எட்டிப் பாயும் குட்டைக் கயலோ!
தோகை மயிலோ! பழத்தோப்புக் குயிலோ!
கட்டிக் கரும்போ! சுவைக்கன்னற் றமிழோ!
காவியமோ! நடை ஓவியமோ! 5

4—10—'71

## எழுந்தருளாயோ!

வானிருள் மாய்ந்தது! மாய்ந்தது மடமை!
மங்கின மீனினம்! வந்தது குளிர்கால்!
தேன்மலர் அவிழ்ந்தது! பிறந்தது தெளிவு!
திசையெலாம் வெள்ளொளி! வருங்கதிர் வாழ்த்து!
மான்விழி மங்கையே! இன்னுமா உறக்கம்?
வாழ்வளி உதயசூரியன்வரக் காணக்
கூன்பிறை நெற்றியைத் தலையணை விலக்கிக்
குலமகளே! பள்ளி எழுந்தருளாயே!

தாவிய ஒளியிடைக் கீழ்த்திசை விடிமீன்
தகுமணை முல்லைபோல் அலர்ந்ததே! கொழுந்திச்
சேவலின் கூவின சிறகினை அடித்தே!
சிறுசிறு சிட்டுகள் சிலம்பின முன்றில்!
மேவிய பள்ளியில் மலரணை உனது
மதிமுகம் விலக்காது இன்னுமா உறக்கம்?
கோவியல் ஒளிசெயும் எழுகதிர் வாழ்த்தக்
கொடியிடையே பள்ளி எழுந்தருளாயே!

இன்னைகள் இயம்பின! இயம்பின நாரை!
கிளையினில் புள்ளினம் இசைப்பதைக் கேளாய்!
பிள்ளைகள் விழித்தனர்! விழித்தது மனையும்!
பெரியவர் தாழினை விலக்கினர் முகப்பில்!
தெள்ளிய உணர்வளி உதயசூரியனைச்
செந்தமிழ் பாடிநீ வாழ்த்திடா தின்னும்
பள்ளியில் கிடப்பதோ பவர்நகை யாரோ?
பால்நிலவே! பள்ளி எழுந்தருளாயே!

கன்றுகள் தாய்மடி நினைத்தன எழுந்தே!
காளைகள் உதறின குளிருடல் தெளிந்தே!
குன்றிடை முழங்கின வைகறை முரசம்!
மங்கையர் நீர்க்குடம் ஏந்தியே நடந்தார்!
இன்றுள பசிப்பிணி வறுமையைக் களைய
எழுந்தது விண்ணிடை உதயசூரியனும்!
ஒன்றிய பள்ளியில் இன்னுமா உறக்கம்?
ஒண்டொடியே! பள்ளி எழுந்தருளாயே! 4

அண்டையில் ஆய்மகள் தயிரினைக் கடைந்தாள்!
அவ்வொலி செவிப்புகா தின்னுமா உறக்கம்?
வண்டலை இடும்ஊர் ஆற்றிடைப் பெண்கள்
மலர்விழி சிவந்திட மூழ்கியே வந்தார்!
கொண்டலைக் கிழித்துமே கொடுமழை விலக்கிக்
குரைகடல் உதயசூ ரியன்எழுந் ததுவே!
கெண்டைகள் வெட்கிடு செவ்வரி விழியாய்!
கிளிமொழியே! பள்ளி எழுந்தருளாயே! 5

காக்கைகள் கரைந்தன! கரைந்ததே இருளும்!
கடிமலர்க் காவினில் கூவின குயில்கள்!
மேக்கினில் இருளும் மறைந்தது விரைந்தே!
விரிமலர் வண்டும் இசைத்தன கேளாய்!
சேக்கையில் வைகறை இன்னுமா உறக்கம்?
செங்கதிர் உதயசூ ரியன்வரக் காண
வாக்கினை அருளி மலரொடு வழுத்து
மறமகளே! பள்ளி எழுந்தருளாயே! 6

---

1—12—66

## என் ஐக்கு உரைப்பாயடி!

மாதுளை ஏந்தியே மங்கை நடந்துவந்தாள்
மாதுளை கண்டு வருந்தினன்—யாதோசொல்
கொள்முதல் என்றான் குளிர்விழியைத் தூதனுப்பிக்
கொள்முதல் என்றாள் குனிந்து! 1

தையால்! எனவிளித்தான்; தாழ்விலக்கி நின்றேன் நான்!
கையால் அணைத்துச்செங் காய்க் கோவைக்—கொய்யாகி
கனியும் சுவைத்தான்! கால்வாய்க் குளிர்நீர்
இனிமை அளித்தான் இரா! 2

சந்தனத்திற் கேங்கித் தவித்திருக்கத் தோழியே!
சந்தனத்தைப் பூசமனம் தாங்குமோ?—சந்தனந்தம்
என்னை அலைக்காமுன் என்னை அறியாமுன்
என்னைக் குரைப்பா யடி! 3

## எவர் தடுக்கக் கூடும்?

பூத்திருக்கும் தேக்குமரம் போலவே—அவள்
காத்திருந்தாள் வேலியின்பின் னாலே!
சேர்த்தணைத்துக் கண்ணைப் பொத்தி நின்றான்!
அவளை வென்றான் 1

அணைத்தகையைக் கிள்ளிக் கிள்ளி
அங்கு மிங்கு மாகத் துள்ளிப்
பணைத்தோளை ஊடுருவிப் பார்த்தாள்!
முகம் வேர்த்தாள்! 2

சிட்டிணையைச் சுட்டிச் சுட்டிச்
செடிகொடியைக் கிட்டிக் கிட்டித்
தொட்டிழுத்தான் பட்டப்பகல் நேரம்
வேலி யோரம்! 3

அவள்பார்ப்பாள் இவள்பார்ப்பாள் வேண்டாம்!
அடுக்கடுக்காய்க் கட்டுக்கதை உண்டாம்!
பவளவாய் உனக்கன்றி யார்க்காம்!
உரிமைப் போர்க்காம்! 4

மண்கலக்கும் விண்கலக்கும் தென்றல்—இருவர்
மனங்கலந்து போனபின் மன்றல்!
எண்கலந்து போனபின் என்னும்?
பிறர் பின்னும்! 5

அவர்தடுப்பார் இவர்தடுப்பார் என்றே—வீட்டுள்
அடங்கியிருந்த நாளெல்லாம் சென்றே
எவர்தடுக்க இனிக்கூடும்? வாழ்வோம்!
இன்பம் சூழ்வோம்! 6

30—10—71

## காதல்

காதல்! காதல்! காதல்! காதல்!—எங்கும்
காதல் பெருவாழ்வே! வாழ்க!
மோதும் கடல்சூழ் உலகினில் எங்கும்
முதிர்ந்த பெருவாழ்வே!—காதல்
முதிர்ந்த பெருவாழ்வே! 1

பெண் :

தென்றல் மலர்தழுவும் நேரம்—மேற்கில்
செவ்வொளி வான் தழுவும் நேரம்
குன்றம் எதிர்ஒலிக்கக் கேட்டேன்—தோப்பில்
குயிலினம் ஆணழைக்கக் கேட்டேன்! 2

ஆண் :

வண்டு மலர்தழுவப் பார்த்தேன்—கிளை
மான்கள் இணைந்து துள்ளப் பார்த்தேன்
கொண்டல் மலைதழுவப் பார்த்தேன்—ஓடை
கொட்டு முழவிசைக்கக் கேட்டேன்! 3

பெண் :

ஆறு கடல்தழுவக் கண்டேன்—கடல்
அலைகள் கரைதழுவக் கண்டேன்
வேறு வேறான உயிர் ஒன்றாய்—நெஞ்சில்
வேரூன்றிப் போவதுதான் காதல்! 4

ஆண் :

கிள்ளை இணைந்து கத்தக் கேட்டேன்—சிட்டு
கிளையில் இணைந்திருக்கக் கண்டேன்
கொள்ளை கொள்ளை காதல் இன்பம்!—உன்றன்
குளிர்விழிக் கீடோ பேரின்பம்? 5

இருவரும் :

எழுத்துப் புணர்ச்சியினைப் போலே—நாம்
இரண்டற ஒன்றிவிட்ட தாலே
இழுக்கின்றி வாழ்வோம் புகழோடே!—நாம்
என்றென்றும் வாழ்வோம் மகிழ்வோடே! 6

---

1—2—65

## நிலவைக் கண்டேன்

ஆண் :

நிலவைக் கண்டேன்
நிலவைக் கண்டேன்
நிலவைக் கண்டேனே—பால்
நிலவைக் கண்டேனே! 1

பெண் :

நிலவுக் கொளிதரு
கதிரைக் கண்டேன்
கதிரைக் கண்டேனே—செங்
கதிரைக் கண்டேனே! 2

ஆண் :

நிலவைக் கண்டேன்
நிலவைக் கண்டேன்
நிலவைக் கண்டேனே—என்
நெஞ்சில் கொண்டேனே! 3

பெண் :

நிலவுக் கொளிதரு
கதிரைக் கண்டேன்
கதிரைக் கண்டேனே—நான்
காதல் கொண்டேனே! 4

ஆண் :

வில்லைக் கண்டேன்
வேலைக் கண்டேன்
சேலைக் கண்டேனே—செந்
தமிழைக் கண்டேனே! 5

பெண் :

தோளைக் கண்டேன்
வாளைக் கண்டேன்
ஆளைக் கண்டேனே—ஆண்
அழகைக் கொண்டேனே! 6

ஆண் :

பிடியைக் கண்டேன்
நடையைக் கண்டேன்
பின்னல் கண்டேனே—வான்
மின்னல் கொண்டேனே! 7

பெண் :

பிடியை வீழ்த்தும்
புலியைக் கண்டேன்
மலையைக் கண்டேனே—வான்
வலியைக் கண்டேனே! 8

ஆண் :

மானைக் கண்டேன்
தேனைக் கண்டேன்
மங்கை கண்டேனே—இச்
செங்கை கொண்டேனே! 9

இருவரும் :

இன்பப் பெருநாள்
அன்புத் திருநாள்
வாழ்வின் முதல் நாளே—வாழ்கநம்
வாழ்வின் முதல் நாளே!

---

2—2—'65

## நெடுந்தூரம்

வட்ட முழுநிலவே! அமிழ்தே!
மாமதிப் பெண்ணரசே!
எட்டி உனைத்தாவ வொண்ணு
தெங்கோநீ பூத்துவிட்டாய்!
கட்டிக் கரும்பவளும் உனைப்போலென்
கருத்தில் கலந்துவிட்டாள்!
எட்டித் தழுவவென்றால் அவள்பூத்த
இடமோ நெடுந்தூரம்! 1

தேன்மொய்க்கும் வண்டினங்காள்! அழகொளிர்
சேயிழையார் விழிகாள்!
நான்மொய்க்க எண்ணவொண்ணுத் தேனடை
நன்மலை பூத்துவிட்டீர்!
கான்மொய்க்கப் பாட்டயரும் குயிலாளென்
கருத்தில் கலந்துவிட்டாள்!
ஊன்மொய்க்கத் தழுவவென்றால் அவள்பூத்த
ஊரோ நெடுந்தூரம்! 2

வான்தவழ் மாமுகிலே! அழகே!
மலர்க்கூந்தல் நல்லொளியே!
நான்உனை நண்ணவொண்ணு மலைஉச்சி
நடுவில்நீ நண்ணிவிட்டாய்!
மான்விழிப் பெண்ணவளும் உனைப்போலென்
மனதில் கலந்துவிட்டாள்!
ஊனில் தழுவவென்றால் அவள்பூத்த
ஊரோ நெடுந்தூரம்! 3

பொங்கு கடல்விளைவே! பவழமே
      பூவையர் செவ்வுதடே!
தங்கி உனைத்தழுவ வொண்ணாத்
      தடங்கடல் பூத்துவிட்டாய்!
மங்கை நல்லாளவளும் உனைப்போல்என்
      மனத்தில் கலந்துவிட்டாள்!
செங்கை அணைவமென்றால் அவள்பூத்த
      திசையோ நெடுந்தூரம்! 4

எட்டா திருந்தாலும் வண்கடல்
      எங்கோ மறைந்தாலும்
விட்டு விடுவேனோ? எனதுயிர்
      மேவிய பெண்ணலவோ?
கட்டுக் கடங்காத என்தமிழ்க்
      காதல் பெருவலியால்
மட்டார் குழலாளை வாழ்வை
      அடைவேன்! அடைவேனே! 5

## அங்கே! அங்கே!!

மாரியெங்கே? மண்ணெங்கே?
வருவழியோ நெடுந்தூரம்!
வழிநில்லா தோடிவரும்!
அங்கே! அங்கே!!
ஏரியெங்கே? கொக்கெங்கே?
இடைவழியோ நெடுந்தூரம்!
இறகடித்துப் பறந்துவரும்
அங்கே! அங்கே!! 1

மடல்எங்கே? வண்டெங்கே?
வருவழியோ நெடுந்தூரம்!
மறவாமல் ஓடிவரும்
அங்கே அங்கே!!
கடல்எங்கே? ஆறெங்கே?
கடக்கும்வழி நெடுந்தூரம்!
கரைகடந்தே ஓடிவரும்
அங்கே! அங்கே!! 2

அலையெங்கே? கடலெங்கே?
அளக்கவொண்ணு நெடுந்தூரம்!
ஆனாலும் ஓடிவரும்
அங்கே! அங்கே!!
நிலவெங்கே? கடலெங்கே?
நெடுந்தூரம்! என்றாலும்
நீளொளிக்கை நீட்டிவரும்
அங்கே! அங்கே!! 3

தீயெங்கே? வேய்எங்கே?
தெரியாமல் இருந்தாலும்
தேய்வினிலே தோன்றிவிடும்
அங்கே! அங்கே!!
நீஎங்கே? நான்எங்கே?
நெடுந்தூரம்? என்றாலும்
நினைப்பெல்லாம் வட்டமிடும்
அங்கே! அங்கே!! 4

---

1—11—71

## ஓடோடிப் போனாய் நீ!

ஏரிக் கரையினிலே மாலை
எரிந்துவீழ் பொன்னொளியில்
கூர்விழி காட்டிக் காட்டி—உள்ளம்
கொண்டதை மறந்தாயோ? 1

சேரிப் பரத்தைஎன் தெய்வம்
என்றுநான் செப்பிய தீந்தமிழை
ஊரறியச் செய்தாய்! பின்னேன்
ஓடோடிப் போனாய்நீ? பெண்மை 2

எழுத நினைக்கின்றேன் காதல்
இன்ப நிகழ்ச்சிகளை!—நன்செய்
உழுத வயல்முளைக்கும் கோரையை
உழவர் வளர்ப்பாரோ? 3

அழுது தொலைவதல்லால்—என தன்மை
ஆரிடம் சொல்லி வைப்பேன்?
கழுதையே ஆனாலும் அதற்கொரு
கட்டுத் தறியு முண்டாம்! 4

வெள்ளத்தைக் கண்டோடும்—இருப்பில்லா
நொன்னைக் கொக்கானாய்! தமிழ்
உள்ளத்தைக் கண்டிருந்தும்—எதற்காக
ஓடோடிப் போனாய்நீ? 5

கள்ளத் தொடர்புடையோர்—என்றும்
காதற் கரையறியார்!—வெட்டுப்
பள்ளத்தைக் கண்டோடும் மழைநீர்ப்
பண்போ காதலடி? 6

காதல் சிறப்புணராக் கயவர்கள்
கண்டபடி சொல்லுவார்! உலகில்
சாதலும் வாழ்வதும்—பிறர்க்காகத்
தாழ்வதும் காதலடி! 7

ஈதலும் காதலடி! இசைபட
இருத்தலும் காதலடி! எண்ணியெண்ணி
நோதலும் காதலடி! அதன்திறம்
நுவலத்தான் கூடுவதோ? 8

---

24—10—71

## சொல்லேன்! சொல்லேன்!

காதலிப்பது காசுக்கா?—அன்றிக்
கண்ணழகுக்கா? உலகில்
காதலுக்கு வகையேதும்
கண்டிருந்தால் நீயெனக்குச்
சொல்லேன்! சொல்லேன்! 1

மோதுகின்ற கடலலையும்—கரையில்
முன்தாழ்ந்த புன்னைகளும்
ஏதுக்குக் கெக்கலிக்கும்?
இடைநிலையைக் கண்டிருந்தால்
சொல்லேன்! சொல்லேன்! 2

பழுத்திருக்கும் கோவைக்கும்—வானில்
பறந்திருக்கும் கிள்ளைக்கும்
வழித்துணையாய் வந்தவர் யார்?
வந்தவரைக் கண்டிருந்தால்
சொல்லேன்! சொல்லேன்! 3

கரைமோதும் கடலுக்கும்—வானில்
கதிர்பரப்பும் நிலவுக்கும்
வரைவுபேச வந்தவர் யார்?
வந்தவரைக் கண்டிருந்தால்
சொல்லேன்! சொல்லேன்! 4

பூத்திருக்கும் பூக்களுக்கும்—புள்ளிப்
பொறிவண்டுக் கூட்டத்திற்கும்
காத்திருக்கச் சொன்னதியார்?
கண்டிருந்தால் நீயெனக்குச்
சொல்லேன்! சொல்லேன்! 5

தொடுவானப் பரிதிக்கும்—காலைத்
துள்ளிவரு வெள்ளிக்கும்
விடிகாலைத் தூதனுப்பி
விட்டவர் யார்? கண்டிருந்தால்
சொல்லேன்! சொல்லேன்! 6

வீசுகுளிர் நீர்நிலையில்—என்றும்
மேவாத பூவண்டும்
ஏசலினால் பூசலினால்
இணைபிரிந்தோர் எங்குண்டாம்?
சொல்லேன்! சொல்லேன்! 7

முன்னழகைப் பின்னழகை—அன்றி
முகத்தழகை வேறழகை
என்னழகைக் கண்டுகாதல் கொண்டேன்!
ஏன் தயங்குகின்றாய் நீ?
சொல்லேன்! சொல்லேன்! 8

எங்கிருந்தோ எப்படியோ வந்தாய்!
இணைந்திருந்தாய் சிலகாலம்!
மங்குபக லாகிவிட்டாய்! இன்றே
மறந்திடுமோ காதலுள்ளம்?
சொல்லேன்? சொல்லேன்! 9

---

25—10—71

## இன்னும் அவள்மேல் நினைப்பா?

பொன்னைப் போலத் தாழை
பூத்துச் சிரிக்கக் கண்டும்
இன்னும் பாடா திருந்தால்—புலவா!
ஏசும் இந்த உலகம்! 1

நீலக் கடல்மேல் தாழ்ந்து
நீண்ட புன்னை பூத்தும்
சாலப் பாடா திருந்தால்—புலவா!
தமிழ்நா டுன்னை ஏசும்! 2

கழியில் நீலம் பூக்கக்
கண்டால் ஏக்கம் உண்டோ?
இழிவாய்ப் பேசும் உலகம்!—புலவா!
இன்னும் அவள்மேல் நினைப்பா! 3

கட்டு மரத்தைக் கட்டிக்
கடலை எதிர்த்தல் வாழ்க்கை!
விட்டுத் தள்ளிப் போடு!—புலவா!
மேன்மைத் தமிழைப் பாடு! 4

கடலில் கலக்கும் ஆற்றில்
கடல்மீன் ஏறிப் போதல்
நடக்கும் செய்கை! அவளும்—புலவா!
நடந்தாள்; விட்டுத் தள்ளு! 5

தென்னம் பாளை வெடிக்கச்
சிறுவர் நண்டைப் பிடிக்க
இன்னும் பாடா திருந்தால்—புலவா!
ஏசும் இந்த உலகம்! 6

தென்றல் வீச உன்றன்
சிரிப்பை ஏனோ காணோம்?
இன்னும் அவள்மேல் நினைப்பா?—புலவா
ஏகும் இந்த உலகம்! 7

பாடும் அலையைக் கண்டுநீ
பாடா திருத்தல் நன்றோ?
ஏடா! உலகம் ஏகும்!—புலவா!
இன்னும் அவள்மேல் நினைப்பா? 8

போனால் என்ன முழுகிப்
போச்சாம்! உதறித் தள்ளு!
ஈனப் பெண்கள் செய்கை!—புலவா!
இன்னும் அவள்மேல் நினைப்பா? 9

இன்னும் அவள்மேல் நினைப்பா?
இதுவும் ஆண்மைச் சிறப்பா?
கன்னற் றமிழில் பாடு!—புலவா!
கவலை மாற்று மருந்தாம்! 10

---

7—10—71

## கவலை ஏனோ மனமே?

வானை முட்டும் மலைமேல்!
வந்து தழுவும் முகிலும்!
மானைநோக்கும் பிணையும்!
மனமே கவலை ஏனோ? 1

ஓடை பூத்த அல்லி
உன்னைக் கண்டே சிரிக்கும்!
பேடைக் குயில்துணை கூவும்!
பின்ஏன் கவலை மனமே? 2

தேனை உண்ட வண்டும்
தீந்தமிழ் இசைக்கும் யாண்டும்!
வானத் தழகே அழகு!
மனமே கவலை ஏனோ? 3

மணத்தை வாரித் தென்றல்
வந்து வந்தெனை அணைக்கும்!
கணக்கில் லாத இன்பம்!
கவலை ஏனோ மனமே? 4

ஆட்டுக் குட்டி தாயின்
அருகில் துள்ளி ஓடும்!
காட்டில் வழியா இல்லை!
கவலை ஏனோ மனமே? 5

கயல்கள் பாயும் குளத்தில்!
காளை முழக்கும் கார்போல்!
வயல்கள் பச்சைக் காடே!
மனமே கவலை ஏனோ? 6

வாழை கோதும் கிள்ளை!
மாவைக் கோதும் தத்தை!
சூழும் இன்பம் இங்கே!
தொல்லை ஏனோ மனமே? 7

அலைகடல் பாயும் நெய்தல்
அடர்நிழற் புன்னைக் கிளைகள்
கலையா இன்பம் ஊட்டும்!
கவலை ஏனோ மனமே? 8

உன்னை உண்ணக் குறையா
மீனை உண்ணக் கொடுக்கும்
கண்ணைக் கவரும் கடலும்!
கவலை ஏனோ மனமே? 6

செம்மை பூத்த பாலைச்
செடிகள் மஞ்சள் பூக்கும்!
இம்மை இன்பம் இங்கே!
ஏனோ கவலை மனமே? 10

## அங்கென்ன பார்க்கின்றாய்!

அங்கென்ன பார்க்கின்றாய்?—அத்தான்!
அங்கென்ன பார்க்கின்றாய்?
இங்கென்னைப் பார்க்காமல்
எங்கெங்கோ எண்ணிநீ!—(அங்கென்ன) 1

திங்கள் முகமென்றும்
செவ்வல்லிப் பூவென்றும்
செப்பிய பேச்செங்கே?—உன்
சிரித்த முகமெங்கே? 2

பொங்கும் இளமையில்
பூரித்த என்னெழில்
மங்கும் நிலவொளியோ?—இன்று
வற்றிய தேனடையோ? 3

காணி நிலம்வீடு
பட்டாடை கைப்பொருள்
காட்டென்று கேட்டேனா?—அன்றி
ஆணிப்பொன் மாமணி
அட்டிகை தோட்டுக்கும்
ஆசையும் பட்டேனா? 4

பைந்தமிழ்ப் பாமாலைச்
சிந்துவெண் பாவிற்கும்
பஞ்சம் மிகுந்ததுவோ?—அன்று
தந்தைதாய் நீயென்று
சிந்தையில் எண்ணினேன்
தக்க பயனிதுவோ? 5

---

4—10—71

## வாழ்க்கை

காதலிப்பது கவலைப் படுவது
கலந்த அடிப்படைச் சேர்க்கை!
கண்டவர் புகழ்ந்திடு வாழ்க்கை!
தீதும் நன்மையும் சிரிப்பதும் அழுவதும்
தீண்டா ஊனுயிர் எங்கே?
தெரிந்தால் காட்டுக இங்கே! 1

செடியும் கொடியும் சிரிப்பதின் காய்ப்பதின்
செய்தியை வண்டிடம் கேட்பாய்!
திரைகடல் நெடுங்கரை பார்ப்பாய்!
படிமிசைப் பிறந்த பறவையும் விலங்கும்
பற்றுப் பிணிப்பில் வாழும்!
பலநாள் இடைநாள் வீழும்! 2

சிரித்த வானும் சிலநாள் அழுதிடும்
திங்களும் ஒருநாள் மறையும்!
தென்றலும் நடுநாள் குறையும்!
[illegible]ரைத்த நீலக் கார்வான் உடுக்கள்
காலையில் மங்கிப் போகும்!
கதிர்வரக் கண்டால் சாகும்! 3

கானும் மலையும் காணும் பொருளும்
காட்டும் வாழ்க்கைக் களிப்பை!
கடைநாள் சாவின் இளிப்பை!
ஊனில் கலந்தாய் உயிரில் கலந்தாய்
ஒதுங்கிப் போனாய் நன்றோ?
ஓயா தழுகிறேன் இன்றோ? 4

1—11—71

# கையறு நிலை

## கண்ணீர் சிந்துக! கண்களே!

கண்ணீர் சிந்துக கண்களே!
கண்ணீர் சிந்துக கண்களே! 1

அண்ணல் பாரதிதாசன் இறந்தார்
அந்தோ! அந்தோ! அந்தோ! மறைந்தார்! 2

மண்ணில் மறைந்தார்! மனத்தில் நிறைந்தார்!
மக்கள் கவிஞர் இறந்தார்! பிரிந்தார்!
புண்ணில் பாய்ந்த புதுவேல் நமக்கே!
புகலிடம் இல்லை புத்துல கிற்கே! 3

காலைக் கதிரவன் என்றும் இருக்கும்!
கடிமணப் பூக்கள் என்றும் சிரிக்கும்!
மாலைச் செக்கர் என்றும் மயக்கும்!
மலைவீழ் அருவி என்றும் முழக்கும்! 4

வட்ட நிலவு வளரும் தேயும்!
வரிக்குயில் என்றும் பாடும்; ஓயும்!
குட்டைத் தாமரை மலரும்; காயும்!
குளிர்மரத் தோப்பு தளிரும்; காயும்! 5

கார்முகில் தவழாக் குறிஞ்சியு முண்டோ?
கருவண் டிசைக்கா முல்லையு முண்டோ?
வார்புனல் அலைக்கா மருதமு முண்டோ?
மறிகடல் முழக்கா நெய்தலு முண்டோ? 6

அழகின் சிரிப்போ அழியா ஓவியம்!
ஆசான் பிரிவென் அழுகைக் காவியம்!
பழகு தமிழுக் கினியார் பிறப்பார்?
பைந்தமிழ் வளத்தை இனியார் நிறைப்பார்? 7

---

23—4—64

## பாவேந்தரோடு!

பாவேந்த ரோடென்றும் அருகிருக்கும் பேற்றைப்
பல்லாண்டு பெற்றவன்நான்! பலநூலைக் கற்றேன்!
பூவேந்து செந்தேனின் புதுச்சுவையை ஒக்கும்
புரட்சிமிகு பாடலெலாம் அவர்பாடக் கேட்டேன்!
மாவேந்து பழச்சாறே அவர்யாத்த பாடல்!
மறுமலர்ச்சி மனமலர்ச்சி மொழிமலர்ச்சி கூட்டும்!
காவேந்து பேரெழிலாம் கவியரசர் உள்ளம்
கனிந்துவந்த கவிதையெலாம் எனை ஊக்கக் கண்டேன்! 1

இளவயதில் அவரிடத்தில் நான்பயின்று வந்தேன்!
இனியமுகம், பாடத்தை எடுத்தியம்பும் ஆற்றல்
வளமுடையார்; வகையுடையார்! அவரிடத்தில் கற்றோர்
மாத்தமிழன் வளமுடையார்; பற்றுடையார்; அஞ்சா
உளமுடையார்; செயலுடையார் உயர்நோக்க முடையார்!
ஒண்டமிழின் முன்னேற்ற நோக்குடையார் ஆவர்!
களமுடைய எதிர்க்கின்ற போர்மறவன் என்றன்
கவியரசர்! பகைகண்டு கலங்கியதே இல்லை! 2

பாப்புனையும் நற்றொழிலை அவரிடத்தில் கற்றேன்!
படித்துணரும் நற்செயலை அவரிடத்தில் கண்டேன்!
யாப்பணியைத் தொன்னூலை அவர்விளக்கக் கேட்டேன்!
யாரினிமேல் அவர்போல எனையூக்க வல்லார்?
காப்பணியாய் எனக்கிருந்தார்; நற்கவிதை யாக்கும்
கலைச்செறிவை நனிவிளக்கி எனைஎழுதச் செய்தார்;
பாப்பாவின் இனமெல்லாம் பாடுகின்ற ஆன்ற
பரம்பரையை, நற்கவிஞர் பாசறையைக் கண்டார்! 3

காடெடுத்த பல்லவர்கள் நற்றேண்டை நாட்டின்
கடல் புரளும் சீர்ப்புதுவை பெற்றெடுத்த செம்மல்
ஏடெடுத்தால் பாப்பிறக்கும்; இனியதமிழ் பிறக்கும்?
எவரிடத்தும் பேச்செடுத்தால் இருபொருளும் பிறக்கும்!
மாடெடுத்து நகைசெய்வோர் மலைக்கின்ற வண்ணம்
வகைவகையாய்த் தமிழ்முத்து மணிமாலை யாக்கிப்
பீடெடுத்த தமிழ்த்தாயின் முடிசூட்டிச் சென்ற
பெரும் புலவர்; பாவேந்தர்; எனதாசான் வாழ்க! 4

பன்னூறு திருமணத்தில் அவைத்தலைமை ஏற்பார்!
படர்ந்துவரு நிழல்போல அவரோடு செல்வேன்!
தொன்னூலின் பொருள்விளக்கிச் சுவைவிளக்கி இல்லம்
தொடங்குகின்ற மணமக்கள் நல்வாழ்விற் கான
பொன்னூறு தீந்தமிழால் புதுக் கருத்தைச் சொல்வார்!
புதுக்கிள்ளை போல்நானும் இரண்டொன்று சொல்வேன்!
மன்னூறு விருந்தினிலும் அருகமர்த்திக் கொண்டு
வயிறூற உண்ணென்று வாயாரச் சொல்வார்! 5

பலாமொய்க்கும் ஈப்போல அவரிருக்க வந்து
பல்லோர்கள் சூழ்ந்திடுவர்; நீண்டகடல் ஓர
நிலாச்சோற்றை உண்பதுபோல் அவர்வாயின் பேச்சை
நெடுநேரம் கேட்டிருப்பர்; சிரித்துமகிழ்ந் திருப்பர்!
புலாலுணவே அவர்விருப்பம்! அவரோடே சேர்ந்து
புசித்தின்பம் கண்டதனல் புல்லுணவை மறுத்தேன்!
உலாவுவார் கடலோரம் அதிகாலை மாலை!
ஒப்பில்லாக் கனகசுப்புக் கவியரசர் வாழ்க! 6

கானெழுந்த மலைக்காட்டு நீரருவி! நன்கு
கனிந்திருக்கும் குண்டுபலா! மாவாழை! உச்சித்
தேனெழுந்த செஞ்சொல்லார்! பூக்காட்டுத் தும்பி!
செந்தமிழ்த்தாய் ஈன்றெடுத்த சீர்த்திமிகு செல்வர்!

வானெழுந்த ஞாயிறவர்! அவரொளியைப் பெற்று
மறிகடல்சூழ் உலகத்தில் தொடுவானில் தோன்றும்
கூனெழுந்த நிலவுநான்! எனதாசான் நீண்ட
குமரிமுனைத் தமிழ்க்கடலே! கடலோரம் நானே! 7

1970 ஆம் ஆண்டு அக்டோபர் திங்களுக்கும் டிசம்பர் திங்களுக்கும் இடையே எழுதப்பட்டது.

## பார் இழந்த தந்தோ!

அலைமோதும் பெருங்கடலே! கடற்கரையின் ஓரம்
அசைந்தாடும் தாழைகளே! பசும்புன்னைக் காடே!
வலைகாயும் மணற்பரப்பே! வாடுலர்த்தும் பெண்கள்
மலர்பூத்த நீள்கழியே! அந்தந்தோ அந்தோ!
கலைவளர்த்த எனதாசான்! தமிழ்வளர்த்த ஆசான்!
கண்மூடிப் போனாரே! கவிஉலகம் என்னாம்?
நிலைகுலைந்த தென்னகத்துத் தாயகத்து மக்கள்
நெஞ்சிற்கு வேல்! வேல்! வேல்! தீக்கொழுந்து! வேலே! 1

குளம்பூத்த தாமரைகாள்! குளக்கரையின் ஓரம்
குனிந்திருக்கும் குருகினங்காள்! கரும்போடு செந்நெல்
வளம்பூத்த நல்நஞ்சை மடைபாயும் சேல்காள்!
மணிப்புறவே! பசுங்கிள்ளாய்! மாங்குயில்காள்! செந்தேன்
இளம்பூத்த தமிழ்மொழியைத் தாயகத்தைத் தட்டி
எழுப்பிவந்தார் எனதாசான்! உலகத்து மக்கள்
உளம்பூத்த பாவேந்தர்! பகைவீழ்த்தும் போர்வாள்!
உயிர்துறந்தார்! அந்தந்தோ! அந்தந்தோ! அந்தோ! 2

கார்தவழும் மலைக்காடே! மலைக்காட்டுச் சாரல்
கசிந்துவரும் மெல்லருவி! கண்கவரும் முல்லாய்!
ஏர்தவழும் பசுங்காடே! பசுங்காட்டுப் பூவில்
இருந்திசைக்கும் வண்டினங்காள்! எழுந்தோடும் மான்கள்!

சீர்தழுவும் தனித்தமிழை எனதுயிரை ஊனைச்
செப்பனிட்டார்; உலகறிந்தார் பரம்பரையைத்
தந்தார்;
பார்தழுவச் சென்றாரே பாவேந்தர் ஆசான்!
பாரதிதா சனைஇந்தப் பாரிழந்த தந்தோ! 3

கொந்தளிக்கும் பெருங்கடல்போல் கொந்தளிக்கும்
நெஞ்சைக்
குடம்குடமாய் நீர்கொட்டிக் குமுறியழும் கண்ணை
எந்தெந்த வகையினிலோ திருப்பமுயன் றாலும்
இருசெவியில் ஒலிக்கின்ற செந்தமிழை யாப்பை
வந்துவந்து மனத்திரையில் நிற்கின்ற ஆசான்
மலர்விழியை மணிமார்பை மறந்திருக்கப் போமோ?
செந்தமிழ்க்கும் செந்தமிழர் நல்வாழ்விற் கிங்கார்
திசைகாட்டத் தென்னகத்தில் இனிப்பிறப்பார்?
அந்தோ! 4

23—4—64

## யார் பொறுக்கக் கூடும்?

வான்பூத்துக் கீழ்த்திசையில் பொற்றுகளைச் சிந்தி
வந்தகதிர் அந்தியிலே மறைந்திடுதல் உண்மை!
தேன்பூத்து மணம்பரப்பி வண்டுகளின் பாடல்
செவிமடுத்த பூக்களெலாம் இற்றுவிழல் உண்மை!
ஊன்பூத்த தமிழுணர்வும் உளம்பூத்த அன்பும்
ஒண்டமிழில் நனிபூத்த இலக்கணமேம் பாடும்
கான்பூத்த அருவியொக்கும் திருக்குமர சுவாமி
கண்கலுழ எமைப்பிரிந்தாய்! யார்பொறுக்கக் கூடும்? 1

வெண்ணிலவு நாடோறும் வளர்ந்தொளியைப் பாய்ச்சி
விரிவானில் அரசோச்சி மறைந்தொழிதல் உண்மை!
மண்ணிலவு நீளாறு மலைபிறந்து வந்தே
மக்களின் உயிரோம்பிக் கடல்மறைதல் உண்மை!
தண்ணிலவு மனத்தோயே! திருக்குமர சுவாமி!
தமிழ்மொழியே! தமிழ்மொழியின் இலக்கணமே! உன்றன்
பண்ணிலவு சொற்களின்றும் காதொலிக்கு தந்தோ!
பகற்கொள்ளை உன்பிரிவு! யார்பொறுக்கக் கூடும்? 2

கார்தேக்கி வைத்திருக்கும் கண்மாயின் வாய்க்கால்
கரைபுரண்ட நீரெல்லாம் வறண்டவயல் பாய்ச்சி
ஏர்தேக்கி நிலம்உழுது நெல்விளைக்கும் நன்செய்
என்றென்றும் எழிலோடே இருந்ததில்லை; உண்மை!
சீர்தேக்கி வைத்திருக்கும் தமிழ்த்தாயின் மூத்த
திருக்குமர சுவாமியே இலக்கணத்துச் செம்மால்!
தேர்தேக்கி விட்டாயே தேரோட்ட நாளில்!
செயலற்றுக் கலங்குகின்றோம்! யார்பொறுக்கக் கூடும்? 3

வளம்வாழும் மலைச்சாரல் மழைவற்றிப் போக
மாத்தீயின் கொடுமைமிகும் நாடறிந்த உண்மை!
குளம்வாழும் தாமரைகள் நீர்வற்றிப் போகக்
குணம்கெட்டு மனம்கெட்டு உயிர்க்கெடுதல் உண்மை!
களம்வாழும் வீரனைப்போல் தமிழ்மொழியைக் காத்தாய்!
காய்மறைக்கும் இலைநீக்கும் இலக்கணத்தின் பெற்றி
உளம்வாழும் பெரும்புலமை இனியெவர்க்கே கிட்டும்?
உனைப்பிரித்தான் கொடுங்கூற்றம் யார்பொறுக்கக்
கூடும்? 4

---

20—6—64

புதுவை இலக்கணச்செம்மல் திரு. குமாரசுவாமி செட்டியார் நீத்தார் நினைவு மலருக்கு எழுதிய கையறு நிலைப் பாடல்

## சற்றொதுங்கிப் போவீர்!

கீழ்வெளுக்கத் தொடுவானில் முளைத்துவரும் வெள்ளி
கிளை அசையப் புதர் அலைய இசையெழுப்பும் புட்காள்!
யாழ்வெளுக்க இசைவெளுக்கும் பூமொய்க்கும் வண்டே!
யான்வெளுத்துப்போனசெய்தி அறிந்ததுண்டோ நீவிர்!
தாழ்வெளுத்த எனதாசான் கனகசுப்பு ரத்தினம்
தலைசாய்ந்து போனதுவே! இயற்கைதரு இன்ப
வாழ்வெளுத்துப் போனேன்நான்! தனித்திருக்க வேண்டும்!
மன்றாடிக் கேட்கின்றேன்! சற்றொதுங்கிப் போவீர்! 1

மனம்நொந்த எனக்கென்றும் வயற்காடும் வானும்
மறிகடலும் எனதாசான் கவியரசர் பாட்டும்
இனம்தந்த எனதண்ணா இனியதமிழ்ப் பேச்சும்
எனைஊக்கி வந்ததுண்டே! உண்மைபே ருண்மை!
சினம்கொண்ட கொடுங்கூற்றம் உயிர்பறித்தான் எங்கள்
செந்தமிழைப் பாவேந்தை! சற்றொதுங்கிப் போவீர்!
தினம்நொந்து சாகின்றேன்! என்னைப்போல் கன்றிச்
செந்தமிழ்த்தாய் சாகின்றாள்! சாகவிட மாட்டேன்! 2

எனதாசான் எனதாசான் எனதாசான் என்றே
இன்றுலகில் பலபேர்கள் மார்தட்டிச் சொல்வார்!
எனதாசான் எனதாசான் எனதாசான் என்றே
இன்றுலகில் மார்தட்ட இருவர்களே உள்ளோம்!
எனதாசான் எனப்புதுவைச் சிவம்சொல்லல் உண்மை!
எனதாசான் எனஉலகம் என்றென்றும் சொல்லும்!
மனம்நொந்த இந்நிலையில் தனித்திருக்க வேண்டும்!
வாய்திறவா தெனைவிட்டே சற்றொதுங்கிப் போவீர்! 3

மன்றாடும் மணிப்புறவே! என் இன்பப் பெயர்த்தி!
வார்த்தெடுத்த பொற்சிலையே! என் இன்பப் பெயரா!
கன்றொத்த இளங்குமரா! பெருங்கிள்ளிப் பையா!
கனிமொழியே! இளங்குழந்தாய்! ஆசைமனை யாட்டி!
என்றென்றும் தமிழுக்கே வாழ்ந்திருந்த மேலோன்
எனதாசான் தமிழ்ப்புரட்சிக் கவிமன்னர் செத்தார்!
இன்றுலகம் கலங்குதந்தோ! தமிழ்கலங்கு தந்தோ!
தனித்திருக்க எனைவிடுவீர்! சற்றொதுங்கிப் போவீர்! 4

23—4—64

## கொடிய கூற்றே!

கொடிய கூற்றே! கொடிய கூற்றே!
அடிமுதல் அறியாக் கொடிய கூற்றே!
வயது முதிர்ந்தும் புதிய வலிவொடு
மாணவர் அறிவுற மாணவர் பயிற்றும்
கணக்காயர் தம்முள் பிணக்கை அகற்றித்
தமிழா சிரியர் தாய்மார் கழகம்
அயரா துழைத்தே அமைத்த மேலோன்!
சென்னை மாநகர் தன்னில் சிறப்புறு
மாணவர் மன்றம் வளர்த்த செம்மல்!
சித்திரைத் திங்கள் செழுநிழல் போல
இத்தரை உலகிற் கிருந்த முதியோன்!
ஆடல் பாடல் அழகிய ஓவிய
போட்டி அமைத்தே புன்றலைச் சிறாரின்
கலையை அறிவைக் கல்விமேம் பாட்டை
நிலைக்கச் செய்யும் நெறிமுறை வகுத்தோன்!
தாத்தா! மயிலை சிவமுத்துத் தாத்தா!
நீத்தார் உலகை நீத்தார் அந்தோ!
அந்நாள் இந்திக்கு இட்ட தீயை
இந்நாள் கொடுங்கூற் றிட்டது போலும்!
வித்தைச் சமைத்து விருந்தூட் டியதுபோல்
அறனில் கூற்றம் அறிவற் றதுவே!
தமிழ்க்கினி யாரே தடியொடு நிற்பவர்?
புலவர்க் கினியார்? தீந்தமிழ்ப்
புலியிழந் ததுமன் போர்மற வனையே!

## யாருக்காக வாழவேண்டும்?

யாருக்காக நான் வாழவேண்டும்?—இவ்வுலகில்
எவருக்காக நான் வாழவேண்டும்? 1

ஊருக்காக வாழ்ந்திருந்தேன்; கண்டபயன்?—இன்றுநான்
உப்புப் பானை ஆகிவிட்டேன்! இல்லை
உளுத்த மூங்கில் ஆகிவிட்டேன்! 2

காரைப் போல நான்கொடுத்தேன்—நன்செய்
கழனி போல நான்கொடுத்தேன்—இந்தப்
பாருக் காக நான் உழைத்தேன்—இந்தப்
பாட்டுக் காக எவன் கொடுத்தான்! 3

பெண்டு பிள்ளை என்றே எண்ணிப்
பெரிய பாடு நானே பட்டேன்!
மண்டை தேய்ந்த திந்த என்றன்
வயிற்றுக்குச் சோறுயார் கொடுத்தார்? 4

கொடுப்பார் யாரோ என்று நான்
குந்திக் குந்தி அழுதேன்—எப்ஜீயார்
கொடுப்பார் என்று சொன்னார்............ 5

---

பாட்டு முடியவில்லை. குறையாக விட்டு விட்டார்.

## மறைந்தாரே அண்ணா!

வான்தோன்றி வளிதோன்றி என்றென்றும் மங்கா
வட்டமிடும் எரிமலையாம் உடுக்கூட்டம் தோன்றிக்
கான்தோன்றி மலைதோன்றிக் கார்முகில்கள் தோன்றிக்
கல்தோன்றி மண்தோன்றிக் கடலலைகள் தோன்றித்
தேன்தோன்றித் தென்கசக்கச் செந்தமிழ்த்தாய் தோன்றித்
தென்னகத்தின் வாரிசுகள் பலபுலவர் தோன்றி
நான்தோன்றிக் கண்டறிந்த நல்லறிஞர் அண்ணா
நற்றமிழ்த்தாய் மூத்தமகன்! மறைந்தாரே அந்தோ! 1

தத்துகின்ற மடையெல்லாம் முத்தினங்கள் தோயத்
தாமரையும் செந்நெல்லும் வாழைபலா மாவும்
கத்துகின்ற புள்ளினத்தைக் கைதட்டிக் கூவக்
கற்றோரும் மற்றோரும் களித்திருந்த நாள்போய்
தொத்துகின்ற பசிநோய்க்கே மருத்துவனாய் வந்து
தூயதமிழ் நாடெங்கும் படிஅரிசி தந்தார்!
கொத்துகின்ற பாம்பின்வாய் உயிர்பிழைக்கக் கூடும்!
கூற்றின்வாய் யார்பிழைப்பார்? மறைந்தாரே அண்ணா! 2

குன்றுதவழ் கார்முகில்போல் குளிர்மைதவழ் முன்றில்
குடியிருந்த ஏழையெல்லாம் கொடுநெருப்புத் தீயின்
வென்றிதவழ் போழ்தினிலே மனம்வெந்தார் அண்ணா!
வேகாத வீடமைத்தார்; மேதை! மா மேதை!
சென்றுதவழ் கடலலைகள் சீர்த்தமிகு சென்னைக்
கடற்கரையின் திசையடைந்தார்! உலகத்தார் உள்ளம்
இன்றுதவழ்ந்(து) எரிகிறதே! தீதீதீ எங்கும்!
எம் மண்ணே! உலகண்ணே! மறைந்தாரே அந்தோ! 3

வான் பார்த்து வயல்உழுது மழைபார்த்து வித்தி
வரகுதினை கம்பெள்ளும் புன்செயிலே காணாத்
தேன்பார்த்து நிற்கின்ற முடவனைப்போல் பார்க்கும்
செந்தமிழ்த்தாய் ஏழைமகன்; நல்லுழவன் வாழக்
கூன்பார்த்து நிலத்துவரிக் குறைபார்த்துப் போக்கிக்
குடிசையெலாம் களிபொங்கும் குளிர்மையினை எங்கும்
தான்பார்த்து மகிழுமுன்னர் முதலமைச்சர் அண்ணா
தலைசாய்த்துப் போனாரே! கண்அழுத தந்தோ! 4

முன்னகமும் புறங்கண்டும் முதுபுலவர் வாழ்ந்தும்
முடிமன்னர் வழிவந்தும் முக்கடலும் சூழ்ந்தும்
என்னகமும் என்னண்ணா அகமுலகம் போற்றும்
இசைபரப்பி என்றென்றும் வாழ்ந்திருக்கும் கன்னித்
தென்னகமே! திருநாடே! உன்றன்நல் வாழ்வின்
திசைதிருப்பம் "தமிழ்நாடு" பெயர்சூட்டி வைத்தார்!
உன்னகத்தில் குடிகொண்டார்! உன்மகனை மூத்த
ஒருமகனை உலகிழந்து வாடுதந்தோ! அந்தோ! 5

புன்னையிலே பொன்பூக்கள்! அப்பூக்கள் மொய்க்கும்
பொரிவண்டைத் தாலாட்டும் கடலலைகள் பாயும்
சென்னையிலே; அந்தந்தோ! நான்கண்ட காட்சி!
தீந்தமிழ்த்தாய் அழுகின்றாள்! மக்களழு கின்றார்!
தென்னையிலே வாழையிலே சிறகடித்துப் பாயும்
செம்மூக்குக் கிளிப்பிள்ளை புல்பூண்டு மாவும்
எந்நிலையோ! என்கண்கள் அழுததேகண் துஞ்சா!
எங்கெங்கும் எம்மண்ணா எனும்அழுகை! அந்தோ! 6

16—2—69

## கவலை மாற்றுகவே!

காரிணம் மறைந்த கடல்நிற வானமும்
நீரினைச் சொரிந்து நிறைத்திடக் கண்டனம்!
கங்குல் மாய்ந்த கதிர்ஒளி காலையில்
பொங்கு நீள்கடல் புறப்படக் கண்டனம்!
திங்கள் வானில் மறையினும் செவ்வொளி
மங்கு மாலையில் வந்திடக் கண்டனம்!
வற்றி மாய்ந்த குளத்துத் தாமரை
உற்ற நீர்த்தலை உயரக் கண்டனம்!
குளிரில் ஒடுங்கிய குன்ற மாங்குயில்
தளிரைக் கோதி இசைத்திடக் கண்டனம்!
காய்கள் உதிர்த்த காட்டு மரமெலாம்
காய்த்துப் பூத்துக் கனிதரக் கண்டனம்!
ஈன்ற அன்னை இறந்திடில் மீண்டுமே
தோன்றல் உண்டோ? சொல்லுநர் யாவரே?
அன்னை அன்னையே! பொன்னம்மாள் அன்னையே!
பொன்னை மானுமோர் பூசிய பொன்முலாம்?
மண்ணில் தோன்றிய யாவையும் மண்ணினில்
திண்ணம் மாய்வது! மாய்வது திண்ணமே!
இன்றோ நேற்றோ இறப்பதும் பிறப்பதும்!
என்றும் நடக்கும் இயற்கை நிகழ்ச்சியே!
அண்ணல் வில்லாள அன்பரே!
கண்ணீர் நிறுத்திக் கவலைமாற் றுகவே! 22

---

1—8—66

தில்லை வில்லாளன் அன்னையார் பொன்னம்மாளின் நீத்தார் நினைவு நாளின்போது பாடிய ஆறுதல்மொழி.

## நல்லோரும் இறப்பதுவோ?

காரடைப்பே உற்றதனால் கண்கவரும்
பொய்கைகளும் களத்து மேடும்
நீரடைப்பே கண்டதுவாம்; வான்விரிந்த
வெய்யோனோ நிலம்எரிக்க
ஊரடைப்பே உடலடைப்பே உளமடைப்பே
கொண்டிங்கு உழலும் நேரம்
மாரடைப்பே குடியரசுத் தலைவர் உசேன்
வாழ்வடைக்க வந்த தந்தோ! 1

கண்ணனை இளமூங்கில் துளைத்தெடுத்த
குழலிருந்து காற்றெழுப்பும்
பண்ணவார்; கார்தவழும் மலைச்சாரல்
பழமாவார்; பசுந்தேன் ஆவார்!
மண்ணவார் பொறுமையிலே; நல்லறிவில்
மலையாவார்; வாழ்வளிக்கும்
கண்ணனை தாய்நாட்டின் பாரதத்தின்
குடியரசுத் தலைவர் காணீர்! 2

வேய்போன்ற நற்பணிவு, பேச்சினிமை,
வெகுளாமை, விரிந்த உள்ளம்,
சேய்போன்ற இன்சிரிப்பு, செயல்திறமை,
நல்லறிவு சேர்ந்த செம்மல்!
தாய்போன்ற அன்புள்ளம் பாரதத்தின்
குடியரசுத் தந்தை ஜாகிர்
மாய்ந்தாரே! மழையில்லாப் பயிரைப்போல்
மக்களெல்லாம் வாடு தந்தோ. 3

நாய்பெற்ற சிலையைப்போல் மக்களெல்லாம்
பாரதத்தில் நலியக் கண்டு
தாய்பெற்ற பிள்ளையெலாம் கல்வியென்னும்
நல்லறிவு நுழைத்தால் அன்றி
வேய்பெற்ற முத்தாகார் எனவெண்ணிப்
பல்கலையின் விளக்காய் நின்று
காய்பெற்ற பாரதத்தைக் கனிபெற்ற
பாரதமாய்க் கண்டார் ஜாகிர்! 4

என்மதமே பொன்மதமாம்! வாழும்மற்
றெம்மதமும் இழிந்த தென்றே
தன்மதமே நிலைநாட்டிப் பாரதத்தை
இரண்டாகத் தகர்த்த போது
புன்மதமே பிரிவினையின் புற்றுநோயாம்
எனச்சொல்லிப் புழுங்கி நொந்து
நன்மதமே எம்மதமும் மக்களொன்றே
என ஜாகிர் நவின்றார் அன்றே! 5

முகமதியர் தாய்தந்தை ஆசிரியர்
வழிநின்று புரிந்து கற்று
முகமதியர் வழிநின்று பிறைவணங்கி
சாந்தியெனும் மூத்த அண்ணல்
மிகுமதியார் உரைகேட்டுத் தாயகத்தின்
பிறப்படிமை விலங்கொ டித்த
வெகுமதியார் மதங்களெலாம் ஒன்றென்னும்
புதுமதியார் வீரர் ஏறே! 6

தனம்கருதிச் செயல்முடிக்கும் தேனீக்கள்
செல்வந்தர் தம்போல் இன்றி
வனம்கருதிக் குகையிருந்து மூச்சடக்கும்
துறவியர்கள் வாழ்க்கை இன்றி

இனம்கருதித் தாயகத்தின் இல்லறத்தின்
மேலான எழுச்சி எண்ணி
மனம்கருதிச் செயல்முடிக்கும் குடியரசுத்
தலைவர்நம் மகான்உ சேனே!

கல்வியெனும் கடல்கடக்கக் கடல்கடந்து
பிறநாட்டில் கல்வி கற்று
வல்வியெனும் மேனாட்டார் அரசொடுக்கி
அடிமையெனும் வாழ்வைப் போக்கிச்
செல்வியெனும் பாரதத்தாய் திருமுடியைச்
செப்பனிட்ட செம்மல் காந்தி
நல்வழியில் குடியரசை நடத்தியவர்
ஜாகிர் உசேன் நல்லோர் ஆவார். 8

இலகுதமிழ் முதலமைச்சர் நல்லறிஞர்
அமரரண்ணா இனிய நண்பர்!
கலகலத்த பேச்சுடையார்! கற்றறிந்த
மாமேதை! கலையின் ஊற்று!
நிலையுணர்ந்து மொழியுணர்ந்து நாடுணர்ந்து
சான்றோர்கள் நெறியைச் சேர்த்தார்!
உலகத்தமிழ் மாநாட்டில் சென்னையிலே
தலைவருசேன் உரைகேட் டோமே! 9

பன்றிகள்போல் பிறந்தாலும் வாழ்ந்தாலும்
நாட்டிற்குப் பயனே இல்லை!
ஒன்றுபிறந் தால்போதும் மகமதியர்
எண்ணிக்கை உயர்வைப் பார்த்தா
அன்றுநாம் பாரதத்தின் குடியரசுத்
தலைமைதந்தோம்? அதுவே அன்னோர்
பொன்றுபுகழ்க் கேபொருந்தும்; புதுப்பரிதி!
வாயாரப் போற்று வோமே! 10

எல்லோரும் எந்நாட்டும் என்றேனும்
  ஒருநாளில் இறப்ப துண்டாம்!
நல்லோரும் இறப்பதுவோ? கொடுங்கூற்றுக்
  கிதனாலே நன்மை என்ன?
பொல்லாத உலகமிதாம்! இவ்வுலகில்
  வாழ்நாளில் புதுமை கண்ட
நல்லோர்கள் செத்தாலும் வாழ்ந்திருப்பர்!
  அவர்வழியில் நடப்போம் நாமே! 11

---

10—5—69

## பவுனம்பாள் புகழ்பாடுவோமே!

வான்பூக்கும் பொன்னொளியை; மழைபூக்க நல்ல
வயல்பூக்கும் நெற்கதிர்கள், வற்றாத வாவி
தேன்பூக்கும் தாமரைகள்; தென்னைமரத் தோப்பில்
செழும்பாளை மலர்பூக்கக் கலியாணம் பூண்டி
வான்பூக்கும் மீனினம்போல் முல்லைமலர் பூக்கும்
வளமனையில் பெண்பிள்ளை செவ்விதழ்கள் பூக்க
ஊன்பூக்கச் செய்கின்ற பொற்பேழை ஒன்றும்
உடன்பூத்து வந்ததுவாம்; மகள்தந்த செல்வம்!

பொன்பெற்ற நன்றிக்கே ஈன்றெடுத்த மேலோர்
புதுப்பெயராம் பவுனம்பாள் என்கின்ற பேரை
அந்நாளில் சூட்டிவைத்தே அகமகிழ லானார்;
அழகுக்கே முனிசாமி அழகுசெய்தார் பின்னர்!
பொன்னான வாழ்விற்கும் புதுமனைக்கும் ஏற்ற
பொற்புடைய மனையரசி இன்றில்லை; உண்மை!
அன்னாரின் நெறிஎண்ணிச் செயலெண்ணி ஆளன்,
அவர்பிள்ளை மூவருமே வழிபடுதல் மேன்மை! 2

பால்வழியும் வட்டமுகம், முத்துப்பல் செவ்வாய்!
பரிவோடு கருத்தூட்டும் பண்பான செஞ்சொல்!
சேல்வழியும் கடைக்கண்கள், பிறைநெற்றி மீது
செம்பொட்டுத் திருமகளின் திருவுருவைக் காட்டும்!
கால்வழியும் நீரொத்த கலங்கமிலா உள்ளம்
கைப்பொருளை அளவறிந்து செலவுசெய்யும் மாண்பு!
மால்வழியும் பவுனம்பாள் மறைவுகொடுந் துன்பம்!
மனமார அவர்புகழை வாழ்த்துதலே இன்பம்! ௩

ஊரினிலே பலகையுண்டாம்! நீள்உலக்கை உண்டாம்!
உதவாத்தக் கையுண்டாம்! பலசெய்கை உண்டாம்!
வாரிவாரிக் கொடுத்துதவும் பவுனும்பாள் கையே!
வாய்இனிக்கச் சமைத்ததுவும் பவுனும்பாள் கையே!
ஊரிலுள்ள உறவுக்கும் உற்றோர்இல் லோர்க்கும்
உடனுதவி செய்ததுவும் பவுனும்பாள் கையே!
மாரியைப்போல் எப்பயனும் கருதாமல் என்றும்
மனம்சோரா தளித்தகையும் பவுனும்பாள் கையே! 4

தற்காத்துத் தன்னினத்தின் தகைமையினைக் காத்துத்
தன்னாளன் நலம்காத்துச் செயல்காத்து நின்று
பொற்பறிவு நற்புதல்வர் ஒருமூவர் ஈன்று
பொருள்சேர்த்துப் புகழ்சேர்த்து மனைமாட்சி கண்டு
விற்புருவ மருமக்கள் பெயரர்களோடு
மிக்குபுகழ் நிலைநாட்டப் பூவனும்பாள் என்னும்
கற்பரசி இன்றில்லை கண்கலங்கு தந்தோ!
கவலைக்கு மாமருந்தாம் அவர்புகழை எண்ணல்! 5

இருளான ராய்வாழும் கணக்கற்ற கோடி
ஏழைகளின் பிறப்பிடமாம் நாம்வாழும் நாடு!
பொருளாள ராய்இருப்போர் கைநீளா தென்றும்!
புன்சிரிப்புப் புவுனும்பாள் இதில்விலக்குக் கண்டீர்!
அருளாளர்; ஏழைகளின் அன்பாளர்; நாட்டின்
ஆக்கத்திற் குழைக்கின்ற தொழிலாள மக்கள்
மருள்நீக்கி வாழ்வளிக்கப் பலதொழிலைக் கண்ட
மாமணியாம் பவுனும்பாள் புகழ்வாழ்க நீடே! 6

வானத்து முழுநிலவாய் மனைதவழ்ந்த பெண்ணாள்!
வருவிருந்து வழிபார்த்து மனங்குளிரும் கண்ணாள்!
கானத்துக் குயிலிசைபோல் கனிவுமிகும் சொல்லாள்!
கைராசி, செயல்ராசி, பொருள்ராசி மற்றும்

தானொத்துக் கணவருடன் மனைநடத்து கின்ற
தனிராசி, மகராசி என்கின்ற வானை
மீனொத்த எண்ணரிய நற்குணங்கள் கொண்ட
வீட்டரசி பவுனாம்பாள் புகழ்வாழ்க நீடே! 7

இளமையிலே இல்லறத்தில் இணைந்திருக்கும் ஆளன்
ஏதேதோ கற்பனையில் சிறகடித்தல் உண்டாம்!
வளமையிலே வாழ்வாங்கு வாழ்ந்திருக்க வேண்டி
வற்றாத பொருள்தேடச் செயல்படுதல் உண்டாம்!
உளமொத்த இல்லாளின் தூண்டுதலி னாலே
ஒளிசிறக்கும் விளக்கைப்போல் மனைசிறக்கக் கூடும்!
தளைசீரும் அடிதொடையும் யாப்பணியும் கூட்டித்
தமிழ்ப்பெண்ணாள் பவுனாம்பாள் புகழ்பாடு வோமே! 8

பிறந்தகத்துக் கொளிசேர்ப்பார் ஒன்றிரண்டு பெண்கள்!
பெற்றோரைச் சுற்றத்தைத் தோழியரை வீட்டை
மறந்துவந்து மணமேற்றுத் தனைக்கொண்ட ஆளன்
வாழ்விற்கே ஒளிசேர்ப்பார் ஒன்றிரண்டு பெண்கள்!
அறந்தவறா மனத்தோடே மனைமாட்சி காட்டி
அவ்விரண்டு வீட்டிற்கும் ஒளிசேர்த்தார் இங்கே
மறைந்தவராம் பவுனாம்பாள்; மாசில்லா வீணை!
வாழ்ந்தமுறை எண்ணியெண்ணி மனமாறு வோமே! 9

விண்மீது பொன்னரிவாள் போல்பிறந்த திங்கள்
விரிவானில் மறைந்தொருநாள் பிறப்பதுவும் உண்டாம்!
மண்மீது பிறக்கின்ற உயிரினங்கள் எல்லாம்
மறைந்தொருநாள் பிறப்பதுதான் மண்ணுலக வாழ்க்கை!
கண்மீது வாழ்கின்ற இமைபோல இல்லம்
காத்திருந்த பவுனாம்பாள் நமைவிட்டுச் சென்றார்!
புண்மீது தீக்கொண்ட நெஞ்சுடையீர்! தீர்ந்து
போனசெயல் எண்ணாமல் மனம்மாறு வீரே! 10

குறிப்பு: புதுவை, சிங்கப்பூர் ஜவுளி ஸ்டோர் பவுனம்பாள் ரோலிங் மில்ஸ் உரிமையாளர் திரு N. முனிசாமி முதலியார் மனைவி பவுனம்பாள் அம்மாள் 2-2-73-இல் உயிர் நீத்தார்-நீத்தார் நினைவு நிகழ்ச்சிக்குப் பாட்டெழுதித் தரவேண்டும் எனப் பேராசிரியர் திரு. N. சிவப்பிரகாசம், M.A. வேண்டினார். அதற்கிணங்க எழுதி, கொடுக்கப்பட்டவை இவை. நிகழ்ச்சிக்குப் பிறகு மேற்படியார் தலைமையில் தொழிலாளர்கள் பேரணியாக வந்து பழங்களும் பட்டாடைகளும் பரிசு தந்து பாராட்டிச் சென்றனர்.

## கலையுலகப் பேரிழப்பு

வீட்டகத்து நல்லொளியைப் பிறப்பிக்க வேண்டி
வெவ்வேறு நோக்கோடு கலையழகி னோடு
நாட்டகத்தை மக்கட்கு நனிதந்த மேலோன்
நடிகமணி நம்.டி.கே. சண்முகமாம் ஔவை!
கூட்டகத்தை விட்டெங்கோ புள்பறந்த தைப்போல்
கூற்றுவனின் கொடுமைக்கே ஆளாகி எமக்
காட்டகத்தை அடைந்தனனே! உளம்தாங்கப் போமோ?
கலையுலகப் பேரிழப்பு! கண்கலங்கு தந்தோ!

6—3—73

# எண்ணம்

## வெண்கழுகுப்பேடை

கழைஉதிர்த்த நெல்அருந்திக் கானமயில் கூவும்!
காட்டெருமை கன்றருகில் அசைபோடும்; நீண்ட
தழைஉதிர்த்த மரக்கிளையில் பேடைச்செம் போத்து
தனித்திருக்கும் சேவலிடம் தாவிப்போய்க் குந்தும்!
மழைஉதிர்த்த கற்பாறைப் பள்ளத்து நீரை
மானினங்கள் கால்மடித்து வாலாட்டி உண்ணும்!
இழைஉதிர்த்த மணியொத்த கொன்றைமலர்ச் சாரல்
இடுக்கினிலே அடைகாக்கும் வெண்கழுகுப் பேடை! 1

கருங்கண்கள், வெள்ளிறகு, பிளந்தவாய் மூக்கு,
கன்னியர்கள் குளிக்கின்ற நிறமஞ்சள் நெற்றி
பெருங்கால்கள், உளியொத்த சிறியவிரல், காட்டுப்
போந்தின் முள்போன்ற நகக்கூர்மை எல்லாம்
ஒருங்கமைந்த வெண்கழுகுப் பேடையோ நித்தம்
ஊன்உணவு குஞ்சுக்குத் தேடிவந்தே ஊட்டும்!
அருங்குடும்பத் தாய்மாரின் பண்பெல்லாம் இந்த
அடர்காட்டு மலைக்கழுகுக் கார்உணர்த்தி வைத்தார்? 2

கண்பறிக்கும் இடிமின்னல் காற்றோடு சேர்ந்தே
களிமெருத்த கார்முகில்கள் பேரிரைச்சல் போடும்!
விண்பறித்து எழுந்ததென மேல்வானில் மோதும்!
வெளியெல்லாம் சுழல்காற்று! விலங்கினங்கள் ஓடும்!
மண்பறிக்க வந்ததென மழைவானில் கொட்டி
வாட்டிற்றே! உயிர்இனங்கள் பசியால்வா டிற்றே!
எண்ணியெண்ணி ஏங்கிற்றே வெண்கழுகுப் பேடை
இரையின்றி வாய்திறக்கும் குஞ்சுகளைக் கண்டே! 3

வான்வெளுக்கத் தாய்ப்பறவை மலைச்சாரல் எங்கும்
வட்டமிட்டு வட்டமிட்டு நெடுநேரம் சுற்றி
ஊன்தேடித் திரிந்ததுவே! ஊன்பொதிந்த சின்ன
உயிரொன்றும் கிடைக்கவில்லை! என் செய்யும் பேடை!
கான்தேடி வயல்தேடிக் கடல் பரப்பும் தேடிக்
கண்ட பயன் களைப்பொன்றே! கூடுதிரும் பிற்றே!
ஊனுக்கு வாய்திறக்கும் குஞ்சுகளைக் கண்டே
ஒருநொடியில் தன்னுடலைக் கிழித்துமூக் காலே! 4

குஞ்சுகளுக் கருகினிலே தாய்ப்பறவை சென்று
கொட்டுகின்ற குருதியினைக் குஞ்சுகளுக்(கு) ஊட்டும்
பஞ்சொத்த பார்ப்புகளோ பசியாறு மட்டும்
பருகிற்றுத் தாயுடலின் செங்குருதி யாவும்!
அஞ்சவில்லை! அசையவில்லை! தாயன்பே அன்பாம்!
அருகினிலே தள்ளாடி அசைந்தசைந்து சென்றே
மஞ்சள்வாய்க் குஞ்சுகட்கு வயிறுார ஊட்டி
மகிழ்ச்சியிலே வெண்கழுகு மாண்டதுவே அந்தோ! 5

வெண்கழுகைப் போன்றவரே நற்கவிஞர் கூட்டம்!
விளையாட்டாய்ச் சொல்லவில்லை! உண்மை! முழுஉண்மை!
புண்பட்ட உள்ளந்தான் பிறர்புண்ணைக் காணும்!
புரியாத சிக்கலெலாம் புரிந்தமனம் நீக்கும்!
கண்ணுக்குத் தெரியாமல் அழுதழுது சோர்ந்த
கவிஞர்தாம் கண்கலுழும் கவிபுனையக் கூடும்!
மண்ணுள்ளோர் சிரிப்பதற்கும் வாழ்வதற்கும் இந்த
மாக்கவிஞர் இல்லையெனில் நாடுசுடு காடே! 6

## விடைப் பாடல்கள்

வினா: 1

வெளிச்ச விளம்பர வேட்கை தணியக்
களித்ததோர் பூம்புகாரீக் காட்சி விழாவினில்
காக்கைகள் கூடிக் கரைந்ததைக் கேட்டதும்
ஆக்கம் அடக்கம் அடடா எவனென
எண்ணிக் கிடந்தேன்! இதுபோலுணர்வுகள்
திண்ணமாய்த் தங்களுக் கேற்பட் டிருக்குமே?

விடை:

என்னை விழாவிற் கழைத்தனர்; என்னுடல் நோய்
பின்னுக் கிழுக்கநான் பேசா திருந்துவிட்டேன்;
வானத்து மாமழை வற்றினும் வற்றாமல்
கானம் கடந்து கழைமாயும் நீர்கூட்டி
நன்செய் விளைத்து நறும்புன்செய் பாலூட்டித்
தஞ்சைப் பெருநாட் டின் தாயாகி விஞ்சு
புகழ்சேர்த்த பொன்னிப் புதுப்பெண் ஒளிசேர்
முகமாகும் பூம்புகார் மூதூர்! அம்மூதூர்
மறைந்த குறைநீக்க வந்த அரசு
நிறைந்த மனத்தால் நினைவூட்டக் கண்டோமே!
சீர்த்தி மிகுந்த செயலிதுவாம்! வாழ்ந்திடுவோம்!
கார்த்திகைத் திங்கள் கடுங்கோடை ஆனாலும்
காக்கைகள் என்றும் கரையும்! அக்காக்கைகள்
போக்கைத் திருத்தல் புலிக்கொம்பைத் தேடுவதே!

வினா: 2

சங்க இலக்கியச் சாயலை இன்று நான்
தங்கள் கவிதையில் தான்காணு கின்றேன்;
முறையாய்த் தமிழை முயன்று படித்து
நிறையாய்க் கவிதைகள் நெய்திடும் தங்களைத்
தண்டமிழ் நாடு தகுதிக் கிணங்கிடக்
கொண்டாட வில்லையே! குற்றம் தன்றோ?

விடை :

தமிழ் படித்த குற்றம்; தலைதாழ்த்தாக் குற்றம்!
அமிழ்தாம் தமிழிருக்க என்றும் அலையேனே!

வினா : 3

என்று மிருக்கும் இயல்புடைப் பாக்களை
இன்றிங் களித்தீர்! இயம்புதும் நன்றி!
எனினும் ஒருபெருங் காவிய நூலைக்
கனியாய்ப் படைத்துக் களிக்கத் தரவிலை!
இந்தக் குறையை இதயச் சுமைதனை
முந்தி இறக்க முனைவதும் என்றோ?

விடை :

அடுப்பில் கொதிக்கும் அரிசியை எல்லாம்
எடுத்து நசுக்கி இறக்குவார் எங்குண்டாம்?
ஒன்றிரண் டாலே உணர்வர்; உலகியல்!
நன்றெனக் கண்டிட நாலாறு வேண்டும்?
எனினும் உமதுள வேட்கையைப் போக்க
இனிநான் எழுத எழுச்சி பெறுவேனே!

வினா: 4

தாழும் நிலையைத் தகர்த்துமே நம்முடன்
வாழுங் கவிஞர் வரிசையில் தங்களின்

நெஞ்சங் கவர்ந்த நிறைகவி வாணரைக்
கொஞ்சம் விளக்கமாய்க் கூற முடியுமா?

விடை :

வாழுங் கவிஞர் வரிசையில் யாவரும்
சூழும் தொடர்பிற் குரியவ ராவார்;
எனினும் தமிழின் இயல்புணர்ந் தோர்கள்
இனிக்கும் கரும்பாய் இருப்பர் மனத்திலே!

வினா : 5

தாசனும் வாணியும் தண்டமிழ்ச் சொற்களா?
வாசனை போலே வடமொழி என்றால்
இதனை விரும்பியே ஏற்றதும் ஏனோ?
மூதற்பெயர் ஏதோ மொழிந்திட வேண்டும்

விடை :

வாணியும் தாசனும் சுத்த வடசொல்லே!
ஏணியைப் போலெனை ஏற்றிவிட் டோர்கள்
அளித்த புனைபெயர்; அந்நாள் முதற்றே
நிலைத்து வருதல் நெடுநாள் பழக்கம்!
அரங்கன் இயற்பெயர்; அப்பெயர் இந்நாள்
கரைந்தது கண்டோம்! பெயரில் கவலைஏன்?

வினா : 6

செய்யுள் இலக்கணம் சிந்தையில் தேக்கிடார்
பெய்யும் தமிழ்ச்சொல் பெருங்கவி என்பர்!
கவிதைக் கிலக்கணம் கற்பெனும் கொள்கை
புவியில் புதுமை புனைவார்க் கிலையிவண்
மாசில் கவித்துறை மாண்பைக் கெடுத்திடும்
வேசிக் கவிதை விளைதலும் நன்றோ?

விடை :

களத்திடைக் கண்ட பதரும் மணியும்
விளக்குமே இந்த வினாவின் விடையை!
விலைமகள் என்றும் குலமகள் ஆகாள்!
அலைகடல் போன்றதே ஆன்றோர் படைப்பு!

வினா :

*கழகம் தொடங்கிய காலம் முதலே
கழகப் பணியில் கலந்தவர் தாங்கள்!
பதவிப் பழத்தைப் பறித்ததும் ஆள்வோர்
முதலில் உமது முகத்தை மறந்ததேன்
வெற்று முழக்க விளம்பர உத்திகள்
கற்றிலை என்றே கழகம் மறந்ததோ?

விடை :

வெற்று முழக்க விளம்பர உத்திகள்
கற்றது மில்லை; நான் கற்கவும் மாட்டேன்!
மறந்தால் கழகம் மறந்து போகட்டும்
இறவாக் கவிதை இனிதெனக்(கு) என்னுமே!

வினா :8

நேரடி யாக நெடுநாள் பழகிய
பாரதி தாசனார் பண்பு நலன்களை
எங்களுக் கெல்லாம் இயம்பிடத் தக்கவர்
தங்களை விட்டால் தமிழகத் தாருளார்?
சிங்கத் தமிழன் சிறப்பினைச் செய்யுளில்
இங்கித மாக எடுத்துத் தருகவே!

விடை :

பாரதி தாசனார் பண்பு நலன்களை
ஊருக்கு ரைக்க ஒருவாயா போதும்?

* தி.மு.க.

கரும்புச் சொலவோ! தொகைப்பாட் டவரே!
மருந்து மடமைக்கு! மாத்தமிழ் வீரன்!
தமிழ்மலர்க் காட்டிடைத் தங்கிய வண்டாம்!
அமிழ்தின் இனிய தமிழ்ப்பா அருவியே!

வினா : 9

தங்கள் நினைவில் தமிழென நின்றிடும்
சங்கக் கவிஞர் சத்து நிகழ்ச்சியில்
ஒன்றிரண் டிங்கே உரைத்திடக் கூடுமா?
இன்றவை தங்களை இன்புறச் செய்யுமா?

விடை :

என்றன் நினைவில் இருக்கும் நிகழ்ச்சியில்
ஒன்று இரண்டா உரைக்க? எனினும்
இளமைத் துடிக்கும் இனியோர் பலரின்
வளமார் உறவும் மறக்கவா முடியும்?

வினா : 10

கழகக் கலைஞர் கருணா நிதியார்
அழகாய்ப் புனைத லனைத்தும் கவியா?
கருணா நிதியைக் கவியெனத் தாங்கள்
ஒருமுறை யேனும் உரைத்ததும் உண்டோ?

விடை :
அலைகடல் சூழ்ந்தநல் அன்பர் பலரும்
உலகக் கவியென ஊக்கிய பின்னும்
கழகக் கலைஞர் கருணா நிதியார்
அழகாய்ப் புனையும் கவிதை அனைத்தும்
நிலையா தெனும்நும் நினைப்பை எழில்சேர்
கலைமதி என்றே கருதக்கூ டாதோ!

வினா : 11

எதற்கும் தொடக்கம் இருக்கும்! நினைவில்
முதன்முதல் தாங்கள் முயன்றியங்கு எழுதிய
பாடல் வரியைப் படிக்க இனிக்குமே!
ஆடகம் ஒத்திடும் அக்கவி கூறுக!

விடை :

என்றன் முதற்பா "தமிழன்" எனுமிதழ்
ஒன்றில் அனுப்ப உடன்வந் ததுவே!
அதன்ஆ சிரியர்என் பாடலை ஆய்ந்தே
புதுமை புதுமையே பாரதிப் பாடலே
என்றெனை ஊக்கி எழுதப் புகழ்ந்தனர்!
அன்றுநான் பாடிய பாடலோ "பாரதிதான்
இன்றடா பாட்டிசைத் துப் பாடடா" என்பதாகும்!
குன்றின் எழுத்தாய்க் குடிகொண்ட தென்னுள்ளே!

வினா : 12

தொட்டில் மொழியும் துணையாய்ப் பிரெஞ்சுடன்
பட்டம் பெறவே படித்ததாய்க் கேள்வி!
அறிந்த மொழியில் அயல்மொழிப் பாக்கள்
அறிஞரும் ஏற்றிட ஆக்கிய துண்டாநீர்?

விடை :

தாய்மொழி யோடு பிரஞ்சுமே தக்கோரின்
வாய்வழிக் கேட்டுநான் மாசறக் கற்றேன்!
அயல்மொழிப் பாக்கள் அறிவேன்நான்; பாக்கள்
செயல்முறை காணேன்; பின்செய்ததும் இல்லையே!

வினா: 13

பண்டை இலக்கியப் பாக்களில் தாங்களே
கண்டெனக் கொண்ட கருத்து வரியெது?

விடை:

"யாதாமால் ஊராமால்" என்கின்ற வள்ளுவரை
ஓதாத நாளெல்லாம் நாளாமோ என்பதுவே!

வினா 14

ஆக்கம் கவிதையில் ஆகுக என்றுமே
ஊக்கிய துண்டா உவந்து துணைவியார்?

விடை :

என் மனைவி சிற்றூர்; எழுதத் தெரியாதாள்!
பொன்னைப் பொருளை அறிவாள்; புகழறியாள்!
அன்னாளின் ஊக்கம் எனக் கூக்கம் ஆகிடுமா?
பின்னாள் செயலெதுவோ? பேச்செடுக்க வேண்டாம்!

வினா :15

திறம்மலி தீந்தமிழ்ப் பாவல! தங்கள்
பிறந்தநாள் செய்தியைப் பேசிட வேண்டுவம்!

விடை :

என்றன் அருமை இளவழுதி நற்கவிஞர்
இன்றும் பிறந்தநாள்; நுப் எண் ணம் என்னென்றார்!
சென்றது சென்றதுவே; என்றும் திரும்பாது!
தன்றே இனிப்புரிக! நற்றமிழைத் தாய்மொழியை
ஊன் உடல்போல் ஓம்பி உலக மொழிக்கெல்லாம்
தேன்வழங்கச் செய்க! திருநாட்டு மக்கள்
பகுத்துண்டு வாழ்க! பகைநீக்கி வாழ்க!
தொகுத்துரைக்கும் நூலின் துணைகொள்க! என்றென்றும்
ஒன்றிரண்டு பெற்றே உயர்குடியின் நற்பெயரை
என்றும் நிறுத்தல் இனிது!

22 —7—73

புதுமைக் கவிஞரேறு, பாவலர்மணி வாணிதாசனாரின் 59 ஆம் ஆண்டு தொடக்க நாள் அன்று கவிஞர் க.பொ. இளம்வழுதி கேட்ட வினாப் பாடல்களுக்குக் கவிஞர் அளித்த விடைப் பாடல்கள்,

## கணக்காயர்

எவரெவரோ பெற்றெடுத்த
பிள்ளையெலாம் தன்பிள்ளை
என்றே எண்ணி
சுவரிடையில் மரநிழலில்
துயருற்ற வாழ்க்கையிலும்
தோய்ந்த அன்பால்
அவரவர்க்கே ஏற்றாற்போல்
அறிவூட்டி நெறிகாட்டி
ஆன்ற மக்கள்
கவர்கல்வி அளிக்கின்றார்
கணக்காயர் பெருவள்ளல்
கவலை யற்றே!

குளம்பூத்த தாமரை போல்
குதித்தாடும் பிள்ளைகளின்
குறும்பைப் போக்கி
உளம்பூத்த இருளகற்றி
ஒழுக்கத்தை நல்லறிவை
ஊட்டி யூட்டி
களம்பூத்த அறுவடையைக்
காண்கின்ற உழவன் போல்
காலம் தோறும்
வளம்பூத்த குடிமக்கள்
கணக்காயர் வழங்குகின்றார்
வாழ்க நீடே!

மண் திறந்து மாடோட்டி
வயலுழுது விதைவித்தி
வளமை சேர்த்தோர்
விண் திறந்து நிலவுலகில்
விரிகடலில் மலைமுகட்டில்
வெற்றி கண்டோர்
எண் திறந்து வைத்தவர் யார்
எனச்சிறிதே நாமெல்லாம்
எண்ணிப் பார்த்தால்
கண் திறந்து வைத்தவர்கள்
கணக்காயர் எனக் காண்போம்
வாழ்க நீடே! 3

தன்னாட்டைப் பின்னாளில்
தகுதி மிகு நன்னாடாய்
இயக்கப் போகும்
பொன்னாட்டை வழிநடத்தும்
பொறிவல்லோர் நல்லமைச்சர்
புலவர் மற்றோர்
எந்நாட்டிற்கும் அளித்தோர்
எவரென்று நாம்சிறிதே
எண்ணிப் பார்த்தால்
மின்னோட்டம் போல் பெருகச்
செயல்வல்லோர் கணக்காயர்
மேலோர் ஆமே!

---

15—8—73

## தமிழ்நாடு வாழ்கவே!

வாழ்க! வாழ்கவே!
மங்காப் பெரும்புகழ்
எங்கள் தமிழ்நாடே!
வாழ்க வாழ்கவே—என்றென்றும்
வாழ்க வாழ்கவே! 1

ஆழ்கடல் முப்பால் வேங்கடம் வடக்கே
அரணசெய் எங்கள் அன்னையர் நாடே! (வாழ்க) 2

மலைபடு வளனும் வயல்படு வளனும்
வற்றாப் பெரும்புகழ் உற்றதமிழ் நாடே!
அலைபடு பெருங்கடல் அக்கரை நாடும்
அருங்கலை வாரி வழங்கிய வள்ளல்நீ! 3

உதய சூரியனும் பொதிகைத் தென்றலும்
உன்புகழ் பாடல் என்னென் றுரைப்பேன்!
இதயம் களிகொள அன்னையர் வாழ்த்த
ஏற்றினர் அரசு கட்டிலேற் றினரே! 4

முன்னாள் ஆண்டோர் உன்னை எதற்கோ
சென்னை என்றழைத்தார்! செய்ந்நன்றி கொன்றார்!
இந்நாள் அரசுஎம் அண்ணா அரசு
பொன்முடி சூட்டினார்! அண்ணா போற்றியே! 5

இந்நாள் "தமிழ்நாடே"! பொன்னாள்! பொன்னாள்!
எமதரும் அண்ணா தமிழக முதல்வன்
செந்நாப் புலவன் வள்ளுவன் வழியில்
செந்தமிழ் அரசைச் செலுத்துவன் வாழியே! 6

---

16—1—69

## என்வேலை!

திருவிளக்கே! தமிழ்மகளே! தித்திக்கும் தேனே!
சீர்த்திமிகு தென்னவர்கள் மடிவளர்ந்த செல்வி!
உருமாறாப் பேரழகி! கன்னிஇளம் பெண்ணே!
உன்னினத்து மொழிக்கெல்லாம் உயிர்தந்த தாயே!
பெருங்கடலும் நீள்வானும் வான்கவிந்த மண்ணும்
பிறந்தவுடன் பிறந்துவந்த குளிர்காற்றும் தீயும்
ஒருங்கிணைந்த புதுப்பொலிவே! தமிழ்த்தாயே! போற்றி!
உனைப்பாடல் என்வேலை! பிறிதுவிரும் பேனே! 1

முகங்காட்டும் முத்தமிழே! முத்தமிழின் சாறை
முதிர்ந்தமலைத் தேனடையில் இல்லையெனக் கண்டேன்!
அகம்புறமும் ஒளிவீசும் உன்அழியா மேனி!
அழகுவிழிக் குளிர்வீச்சின் தொகைஎட்டுத் தொகையே!
பகைஓட்டும் வேல்பரணி! தாமரையாம் தாளில்
பாட்டிசைக்கும் சிலம்புமணி மேகலை முப்பாலும்
வகைவகையாய்ப் பூண்டவளே! தமிழ்த்தாயே! உன்னை
வாழ்த்துவதே என்வேலை! பிறிதுவிரும் பேனே! 2

தென்னகத்துத் தமிழ்மக்கள் பல்லோர்கள் வாயைத்
திறவாத ஊமைகளாய்ச் செயலிழந்து போனார்!
முன்னகத்து நல்வாழ்வைப் புறப்பண்பை இன்று
முறைப்படுத்திச் செயல்படுத்த முனைந்து விட்டார்
கண்டேன்!
பின்னகத்துப் பகைநுழைவு பலபார்த்த துண்டே!
பேடிகளை வீழ்த்துதற்குக் கூர்வாளா தேவை?
என்னகத்துக் குடிகொண்ட செந்தமிழே! தாயே!
என்வேலை உனைவாழ்த்தல்! பிறிதுவிரும் பேனே! 3

உன்பகைவர் என்பகைவர்! உண்மை! முழு உண்மை!
உயிர்போகும் நேரத்தும் இதைமறக்க மாட்டேன்!
உன் அன்பர் என் அன்பர்! உண்மை! முழு உண்மை!
உற்றபொருள் இலையெனினும் உடலுதவி செய்வேன்!
எந்நாளும் உனைவெற்றி கண்டபகை இல்லை!
இடைபுகுந்த வடமொழியும் பிறமொழியும் கூறும்!
தென்னவளே! தீந்தமிழே! என்னுயிரே! உன்றன்
சீர்பாடல் என்வேலை! பிறிதுவிரும் பேனே! 4

---

25—11—64

## என் நன்றி!

கடலின் முழக்கும் ஓர்பால்;நீள் தாழைப்பூப் பூத்துக்
கழிமுழக்கும் ஓர்பால்;முட் காட்டோர நன்செய்
இடமுழக்கும் கால்வாய்கள்; இருகொம்பால் முட்டி
இடிமுழக்கும் காரெருமை நீள்வாலைத் தூக்கி;
அடம்பிடிக்கும் குழவியைப்போல் அதிகாலை நேரம்
அணியணியாய் முழக்கும்நற் றெழிற்பேட்டைச் சங்கம்;
உடல்உயிரும் தமிழ்முழக்கும் சான்றோர்வாழ் புதுவை;
ஒன்புகழை நனிமுழக்கும் என்தமிழ்ப்பாப் பாடல்! 1

அலைஇசைக்கக் கேட்டிருக்கும் புதுவைநகர் மன்றம்
அமர்ந்திருக்கும் அமைச்சர்களே! பெரியோரே! சாரல்
மலையிசைக்கும் அருவியெனக் குளிர்மையினைச் சேர்க்கும்
மணிவயிற்றுத் தாய்மாரே! தமிழகத்தைக் காக்கச்
சிலைஇசைக்கும் படிக்கிளம்பும் இளஞாயி றொத்த
சீரியநல் மறவோரே செந்தமிழர் அன்னார்
கலைஇசைக்கும் தேன்றமிழ்ச்சொல் நல்இளைஞர்!செஞ்சொற்
கவிபாடி வாணிதாசன் கைகூப்பி னேனே! 2

பன்னாளின் நன்னினைவாம் சீர்ப்புதுவை மண்ணில்
பாவேந்தர் சிலையெடுக்க வேண்டுமெனும் வேட்கை!
சின்னாளின் முன்புதுவை செயலாற்றும் அரசு
சிறப்படைந்து போனசெயல் நாமெல்லாம் கண்டோம்!
நன்னாளின் நாள்புதுவை நம்மரசு வாழ்க!
நாமெல்லாம் முழுநிலவின் கடலலைபோல் ஆனோம்!
இந்நாளின் நம்புதுவைத் தமிழ்ச்சங்கம் வாணிக்(கு)
எடுத்ததுவாம் பாராட்டு! மிகுநன்றி! வாழ்த்தே! 3

நாடாண்ட அரசின்றோ மறந்திருந்தால் என்னாம்?
நாவற்றாத் தமிழ்பாடி நயந்தோருக் கெல்லாம்
காடாண்ட யானைமுதல் பொற்கலங்கள் ஈந்த
காவலர்கள் இலை;அதனால் கவிவாழ்க்கை இல்லை!
வீடாண்ட தாய்மாரும் பெரியோரும் சேர்ந்தே
மேன்மைமிகு நற்புதுவைத் தமிழ்ச்சங்கம் கண்டு
மேடாண்ட புரவலர்போல் ஆண்டாண்டு தோறும்
மிகுசிறப்பு கற்றோர்க்குச் செய்கின்றார்; வாழ்க! 4

எழுத்தசைசீர் அணியாப்பு நனிகற்ற பின்னர்
இன்கவிதை பாடுவதே மேலோர்கள் செய்கை!
பழுத்திருக்கும் நற்புலமை பண்பட்ட இந்தப்
பார்புகழும் புதுவைக்குத் தனிச்சொத்தாம் கண்டீர்!
கழுதைக்கும் குதிரைக்கும் காட்டிடையில் வாழும்
கருங்குயிற்கும் குரல்ஒன்றோ? மனம்போன போக்கில்
எழுதுகின்ற எழுத்தெல்லாம் கவிதையென்று சொல்லி
இன்றுசிலர் எழுதுகின்றார்; தமிழ்வாழப் போமோ? 5

சிட்டாடு முன்றில்லில் தெருத்திண்ணை யோரம்
சிறுபிள்ளை விளையாடச் சிரிப்புவரும் நெஞ்சில்!
பட்டாடை உரல்சுற்றிப் பார்த்திருந்தால் என்னாம்?
வட்டாடு கின்றார்கள் அரங்கினிலே ஆட
மரபொன்று வேண்டாவா? சிலபேர்கள் சீட்டுக்
சட்டாடு கின்றார்கள் துருப்பெதற்குத் தேவை!
தூயதமிழ் பாடுதற்கும் யாப்பணிகள் வேண்டும்!

சாய்வாழ வற்றாத சதுப்புநிலம் வேண்டும்!
தாமரைகள் வாழ்வதற்குக் குளம் நிரம்ப வேண்டும்!
காய்வாழக் கனிவாழ மரம்வாழ வேண்டும்!
கார்வாழ மலைவாழக் கடல்வாழ வேண்டும்!

செய்வாழ ஈன்றெடுத்த தாய்வாழ வேண்டும்!
சீர்ப்புதுவைத் தமிழ்ச்சங்கம் சிறப்புற்று வாழ
வாய்வாழ வாழ்த்துகின்றேன்; என்னருமை மக்காள்
மறவாதீர் தமிழ்ச்சங்கம் உம்முடைய சொத்தே! 7

பாட்டெழுதும் பாவலர்க்கு நானொன்று சொல்வேன்!
பரிசெண்ணிப் புகழெண்ணி எந்நாளும் எந்த
நாட்டினிலும் பிறர்க்குழைப்போன் தோன்றியதே இல்லை!
நாம்நமக்கே பாடுகின்றோம் நல்லதையே எண்ணி!
கூட்டில்லாக் குயிலெதற்குக் கிளையிருந்து பாடும்?
குளிர்தென்றல் ஏன்வீசும்? பூஎதற்குப் பூக்கும்?
வீட்டரசி தாயைப்போல் தமிழ்ச்சங்கம் உண்டு!
மேலோர்கள் இருக்கின்றார்! வேறென்ன வேண்டும்? 8

என்னருமை இளங்கவிகாள்! பிறநூல் கற்பீர்!
இனியதமிழ் வளர்த்திடுவீர்! கெஞ்சிக் கேட்பேன்!
முன்னிருந்த தமிழ் மரபை அணியை யாப்பை
முறையோடு கற்றிடுவீர்! தமிழின் வாழ்வைப்
பின்னிருந்து குலைக்காதீர்! கட்டுச் சோறு
பெரிதென்று நினைத்திடுவீர்! வழுச் சொல் வேண்டாம்!
இன்றிருந்து புதுப்பொலிவைப் புதிய நோக்கால்
எழில்முடியைத் தமிழ்மொழிக்குச் சூட்டு வீரே! 9

பாட்டென்றால் அதுநாட்டைத் திருத்த வேண்டும்!
பண்பென்றால் அதுநெஞ்சில் பதிய வேண்டும்!
கூட்டென்றால் அதில் வலிமை கூட வேண்டும்!
கொள்கையெனில் அதில்நல்ல குறிக்கோள் வேண்டும்!
காட்டென்றால் உள்ளத்தைக் கற்றோர் போலக்
கைப்பொருளை யுந்திறந்து காட்டல் வேண்டும்!
நாட்டென்றால் நற்புகழை நாட்டு கின்ற
நமதுதமிழ் அரசைப்போல் நாட்ட வேண்டும்! 10

ஒண்டிவந்து வாழ்ந்திருக்க நினைத்தான்; வந்தான்
உயர்கவிஞன் பாரதியும்! அவனைப் போல
முண்டிவந்து வாழ்ந்தார்கள் புதுவை மண்ணில்;
மூண்டதுவே புரட்சித்தீ! அந்நாள் தொட்டுக்
கண்டுவந்த செயலிதுவாம்! அதற்குச் சான்று
கவின்புதுவைத் தமிழ்ச்சங்கம்! மறக்க வேண்டாம்!
பண்டுவந்த பெரும்புலவர் தழைக்க வேண்டும்!
பாரானத் தமிழ்த்தாயை வளர்ப்போம்; நாமே!! 11

தமிழ் வளர்ந்தால் நாம் வளர்வோம்; நம்மைப்போல
தடங்கடல்சூழ் மற்றோரும் வாழ்வர்! கன்னித்
தமிழ் வளர்ந்தால் யாதும்ஊர் கேளிர் யாரும்;
தமிழ் நோக்காம்; பூங்குன்றன் நோக்காம்! அன்னைத்
தமிழ் வளர்ந்தால் செயல்வளரும்; கடல்சூழ் நாட்டுத்
தக்கோரின் உளம்வளரும்! இல்லத் துள்ளே
தமிழ்வாழ்க வாழ்கவென வாழ்த்து வோமே! 12

என்றென்றும் இலக்கணத்தை இலக்கி யத்தை
இயன்றவரை கற்றோர்பால் கேட்டுக் கேட்டு
நன்றென்றும் அலவென்றும் அறிவால் ஆய்ந்தே
நல்லோர்கள் கற்றறிந்தார்; அஃதே போலக்
குன்றென்றும் குளமென்றும் எண்ணி டாமல்
குலம்தழைக்க வந்தபெரும் குணச்செல் வத்தை
நின்றென்றும் நீகாப்பாய்! தமிழா! உன்றன்
நெஞ்சள்ளும் தமிழ்பாட்டாம்! காப்பாய் நீடே!! 13

தற்காலம் தமிழ்நாட்டை ஆளுகின்ற ஆட்சி
தமிழரசு; தமிழ்ஆட்சி மொழியென்றே வாயால்
சொற்சிலம்பம் செயக்கேட்டோம்; பெருமகிழ்ச்சி நன்றி!
துறைதோறும் துறைதோறும் பிறமொழியைக் கற்றோர்

மற்சிலம்பம் செய்கின்றார்; தமிழ்மொழியா வாழும்?
வாயில்லா ஊமன்போல் வாழ்கின்றார் மக்கள்!
பொற்புடைய தமிழ்மக்காள்! மரபுடைய நல்ல
புதுத்தமிழை வளர்த்திடுவீர்! வாழ்ந்திடுவீர் நீடே! 14

இன்றாளும் அரசியலால் எப்பயனும் கிட்டா!
இவர்க்காக வா, தமிழை இரவெல்லாம் கற்றோம்?
குன்றெதிர்க்கும் நம்பாடல்! குரைகடலும் ஓர்நாள்
கூறுவதைக் கேட்பார்கள்; குறிப்புணர்ந்து கொள்வார்!
என்றென்றும் நாம் இறந்து போனாலும் செஞ்சொல்
இனியகவி சாவாது; நாம்சாவ மாட்டோம்!
நன்றறிந்தும் இலக்கியத்தின் நயனறிந்து கொண்டும்
வழங்காத நாட்டிற்கே நாம்வழங்கு வோமே! 15

பிற்காலம் நமைஎண்ணும் பெரியோர்கள் ஆய்வைப்
பேசுகின்ற நல்வாய்ப்பை இளைஞரிடம் சேர்ப்போம்;
முற்காலம் நற்காலம்; ஆன்றவிந்த சான்றோர்
முதுபுகழும் இலக்கியமும் அழிந்தொழிந்த துண்டோ?
கற்காலம் கண்டவனே! தமிழ் மகனே! உன்றன்
கைகாலின் உழைப்பலவோ இன்றுள்ள நாடு!
பொற்காலம் மறைந்தாலும் இன்றுள்ள நாட்டின்
புதுக்காலம் இனித்தேவை உன்கடமை யாமே! 16

மன்றிருந்து சிறப்பிக்க வந்துள் ளோர்க்கும்
வரிசையாய் அங்கிங்கே காற்றுக்காக
நின்றிருந்து சிறப்பிக்க வந்துள் ளோர்க்கும்
நெறிசெலுத்தும் புதுவைமா நிலத்தை மேலாய்
இன்றிருந்தே ஆள்கின்ற அமைச்சர் கட்கும்
இனியதமிழ்ச் சங்கத்தின் உறுப்பினர்க்கும்
அன்றிருந்தே இன்றுவரை எனைவாழ் விக்கும்
அருந்தமிழ்க்கும் என்நன்றி! வணக்கம்! வாழ்த்தே! 17

வேறு

வாழ்க புதுவைத் தமிழ்ச்சங்கம் பல்லாண்டு
வாழ்க வளமுடன் வாழியவே! 18
வாழ்க தமிழ்மொழி! வாழ்க நல்லோர்கள்!
வாழிய புதுவை மாநிலமே!

---

6—5—73

6—5—73 அன்று புதுவை நகர மன்றத்தில் நடைபெற்ற புதுவைத் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் முதல்வர் திரு M.O.H பாருக் அவர்களால் "பாவலர் மணி" என்றுபட்டம் சூட்டிப் பட்டயம் வழங்கிய போது பாடிய நன்றிக் கவிதை.

## ஒற்றுமையோடு வாழ வேண்டும்

ஒற்றுமையோடு வாழவேண்டும்—தமிழ்இனம்
ஒற்றுமையோடு வாழவேண்டும் 1

மற்றவர் நமைஆள வாய்பொத்திக் கிடப்பதே
ஒற்றுமை எனச்சொன்னால் பொருளல்ல உன்னிப்பார்! 2

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தில் பிறந்தவர்
கலைகள் பலவளர்த்தே மற்றவர்க்(கு) அளித்தவர்
அல்லும் பகலும் தாய்நாட் டாக்கத்திற் குழைத்தவர்
அடிமையாய் இருப்பதோ? மற்றவர் ஆள்வதோ? 3

மலைவளம் வயல்வளம் மறிகடல் பொருள்வளம்
வழங்கிப் பிறநாட்டார் வாழநாம் வாழ்ந்தவர்
கலைவளம் தொழில்வளம் கற்பனைக் கவிவளம்
கடல்தாண்டித் தந்தவர்! எந்நிலை வந்தவர்? 4

## இனம் ஒத்தால் நாம் வாழ்வோம்

இந்தநிலை நாட்டில் வந்ததெதனால் என்றே
எண்ணிப் பார்த்த துண்டோ?—தம்பி—நீ!
எண்ணிப் பார்த்த துண்டோ? 1

சொந்தநா டிருக்கையில் அந்தஇலங்கை சென்று
தோலும் எலும்புமாய் மீளும் திராவிடர் 2

ஊருக் குழைத்துழைத்தே ஓடாகி மீண்டுநம்
ஊருக்கு வருவதோ நாம்பெற்ற அரசாட்சி
யாருக்கும் பொறுப்பில்லை; நம்வாழ்வை நம்நாட்டை
யார்எண்ணப் போகிறார்கள்? இனம்ஒத்தால்
நாம்வாழ்வோம் 3

## நினைத்துப் பார்

கற்றோரும் மற்றோரும் கண்டு களித்திருக்கப்
பெற்றோம் தமிழர் பெருவாழ்வு—மற்றோர்
கலந்தார்; அதனால் பிரிந்தோம்; அழிந்தோம்;
நிலையடைய வேண்டும் நினை!

## சொல்லுக காக்காய்!

காக்காய், காக்காய்! கரிய காக்காய்!
நீயும் உன்றன் இன்பப் பேடையும்
வடதிசை சென்று இமயம் பார்த்துத்
தென்திசை நோக்கித் திரும்புங் காலை
கோட்டை கொத்தளம் கோபுரம் நிறைந்த

தில்லி யருகே செல்லுக விரைந்தே
தென்னாட் டாரியன் செருக்கில் மிதந்து
மன்னவன் தானென மனப்பால் குடித்து
நின்றுகொண் டிருப்பான் நீள்நிலை மாடியில்!
அன்னவன் அருகில் அண்டாங் காக்காய்!

இந்தியை எதிர்க்கத் திராவிட இளைஞர்
வந்துகொண் டிருக்கிறார்; வந்துகொண் டிருக்கிறார்;
வடமலை நோக்கி வந்துகொண் டிருக்கிறார்!
முன்னாள் குட்டுவன் முடியை நெரித்ததை
மறந்தா யாயினும் மறந்திடப் போமோ?

திராவிட நாட்டில் இந்தியை அன்று
திணிக்க நினைத்துத் திணறிய திணறல்?
திராவிட நாட்டில் இந்தியை மீண்டும்
திணிக்க வேண்டாம்; திணிப்பா யாயின்
நீயும் உன்றன் அரசியல் நண்பரும்

அல்லல் உறுவீர்! என்றே
சொல்லுக காக்காய்! சொல்லுக நீயே!

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

(எண் : பக்க எண்)

வ





## கவிஞரின் பிற நூல்கள்

1. தமிழச்சி—1949,
2. கொடிமுல்லை—1950,
3. பெரிய இடத்துச் செய்தி—1951
4. தொடுவானம்—1952
5. எழிலோவியம்—1954
6. வாணிதாசன் கவிதைகள் தொகுதி-1—1956
7. பொங்கற் பரிசு—1959
8. தீர்த்த யாத்திரை—1959
9. இன்ப இலக்கியம்—1959
10. குழந்தை இலக்கியம்—1959
11. சிரித்த நுணா—1963
12. இரவு வரவில்லை—1963
13. பாட்டு பிறக்குமடா—1963
14. இனிக்கும் பாட்டு—1965
15. எழில் விருத்தம்—1970